

# கல்கி

KALKI 28.10.90 ரூ. 2.50



## கலகலத்துக் கொண்டிருக்கும் கர்நாடகக் காங்கிரஸ்

—நேரடி ரிப்போர்ட்

# க்ளாக்டோ இப்போது எல்லா கடைகளிலும் சிக்கனமான ஒரே விலையில்.

நாடெங்கிலும் வரிகள் உட்பட ஒரே விலையில் கிடைக்கிறது க்ளாக்டோ.

முக்கிய அறிவிப்பு:-
உங்கள் குழந்தைக்கு உகந்தது தாய்ப்பால்.




நுகர்வோர்க்கென வெளியிடப்படும் ஒரு தகவல்:
அனைத்து வரிகளும் அடங்கிய ஒரே-விலை.

Gx.281.90 Tm

# கல்கி பொன்விழா நாவல் போட்டி




## பரிசு ரூ. 40,000

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/— |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/— |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |

---

**முடிவு தேதி: ஆகஸ்டு 31, 1991**

---

O இதற்கடுத்த பத்து மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து கல்கி பொன் விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.

O பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.

O நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.

O கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.

O பிரதி வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 — 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.

O கடிதப் போக்குவரத்து கிடையாது.

O சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

O பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

O அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன் விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

— ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

# "ராஜாஜி பற்றிக் கலைஞர் எழுதியவை உண்மையல்ல!"

**கல்லக்குடி ரயில் மறியல் போராட்டத்தில் கலைஞர் கைது செய்யப்பட்டு விசாரணை நடந்த போது என்ன நடந்தது? அன்றைய முதல்வர் ராஜாஜி நீதி விசாரணையில் குறுக்கிட்டாரா? இது பற்றி அன்றைக்கு அரியலூர் சப்—மாஜிஸ்திரேட்டாக இருந்த பி. எம். நாராயணசாமி இங்கே விளக்குகிறார்...**

**நா**ன் அரியலூரில் சப்—மாஜிஸ்திரேட்டாகப் பணியாற்றிய போது, டாக்டர். மு. கருணாநிதி தலைமையில், கல்லக்குடி



போராட்டம் நடந்தது. அதற்காக நான் அவருக்கு ஆறு மாதக் கடுங்காவல் சிறைத் தண்டனை அளித்து, ஜெயிலில் 'சி' கிளாஸ் போட்டேன். அவருக்காக அப்போது இருந்த அசிஸ்டண்ட் பப்ளிக் பிராசிக்யூட்டர் சந்திரசேகர் உடையார் என் கோர்ட்டில் ஆஜராகி கருணாநிதியின் ஸ்டேடஸை எடுத்துச் சொன்னதின் பேரில், அவருக்கு ஜெயிலில் 'பி' கிளாஸ் அனுமதிக்கும்படி, அப்போது இருந்த ராஜாஜி சர்க்காருக்கு சிபாரிசு செய்தேன். ஆறு மாத சிறைத் தண்டனை முடிந்து, கருணாநிதி சென்னைக்குத் திரும்பினார்.

அதற்குப் பிறகு இரண்டு மூன்று மாதங்கள் சென்றபின், ஒரு நாள், என்னைச் சந்திரசேகர உடையார் திருச்சியில் சந்தித்த போது, "You have made him a hero" என்று சொன்னார். "எனக்குப் புரியவில்லை" என்று சொன்னேன். அதற்கு அவர் பின்வருமாறு சொன்னார்:

"கருணாநிதியை டால்மியாபுரம் போலீசார் சார்ஜ் செய்தது ரயில்வே டிரஸ்பாஸ் ஆக்ட்டின் கீழ்தான். அதற்கு நீங்கள் அவருக்கு கோர்ட் கலையும் வரை அல்லது ஒரு நாள் அல்லது ஒரு மாதம் தண்டித்து இருக்கலாம். ஆனால் நீங்கள் அவருக்கு ஆறு மாதக் கடுங்காவல் சிறைத் தண்டனை அளித்தீர்கள். அவர் விடுதலை ஆகிச் சென்னைக்கு வந்த போது, எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் எம். ஜி. ஆர். அவர்கள் அவரை அன்புடன் வரவேற்றார். ஸ்டேஷனுக்கு வெளியே நின்று கொண்டிருந்த ஆயிரக்கணக்கான மக்கள், அவருக்கு அமோகமான வரவேற்புக் கொடுத்தார்கள். அன்றைக்கே கருணாநிதி மக்கள் தலைவர் ஆகி விட்டார். அதைத்தான் நான் உங்களைச் சந்தித்ததும் "You have made him a hero" என்று சொன்னேன்" என்றும் சொன்னார்.

ஆனால் 25.05.90 ஆம் தேதியிட்ட குங்குமம் பத்திரிகையில், கலைஞர் 'நீதியும் நிர்வாகமும்' என்ற தலைப்பில் நான் கருணாநிதியைத் தஞ்சை ரெயில்வே ஸ்டேஷன் ஓய்வறையில் சந்தித்த போது, எனக்கும் அவருக்கும் நடந்த உரையாடலைப் பற்றிப் பின்வருமாறு எழுதி இருக்கிறார்:

'அரியலூர் சப்—ஜெயிலில் அடைபட்டிருந்த உங்களை, அரியலூர் கோர்ட்டில் விசாரித்து, கல்லக்குடி போராட்டத்திற்காக ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை வழங்கிய ஆர்.டி.ஓ.வும் நீதிபதியும் நானேதான். அதற்குப் பிறகு உங்களை — சென்னையில் வரவேற்பு நிகழ்ச்சியை — தொலைவிலிருந்து

கண்டு களித்தேன். இப்போது சொல்லுங்கள் உங்களை ஹீரோ ஆக்கியது நான் தானே?' என்று சிரித்துக் கொண்டே கேட்டார். 'உங்களை விசாரித்துத் தீர்ப்புச் சொல்ல நான் கோர்ட்டுக்கு வருவதற்கு முன், சென்னை முதல் அமைச்சர் அலுவலகத்திலிருந்து எனக்கு டெலிபோன் வந்தது. கல்லக்குடி போராட்டத்தில் ஈடுபட்ட மற்ற குழுவுக்கெல்லாம் இரண்டு மாதம், மூன்று மாதம் தண்டனை கொடுங்கள். கருணாநிதி குழுவினருக்கு மட்டும் ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை கொடுங்கள் — இப்படி ராஜாஜி அவர்கள் உத்தரவிட்டார்.

'நீதி நிர்வாகம் ஒன்றாக இருந்த போது இரண்டும் என்ன பாடுபட்டிருக்கின்றன பாவம். என்னை அரசியலில் ஹீரோ ஆக்கியது அவரா? இவரா?'

நான் கருணாநிதியைத் தஞ்சையில் சந்தித்தது உண்மைதான். நான் அப்போது விவசாய வருமான வரி ஆபீசராக இருந்தேன். கேம்ப் போய் விட்டு திருச்சிக்குத் திரும்ப தஞ்சை ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தேன். ரயில் வர நேரம் இருந்ததால் அங்கு ரிடையரிங் ரூமில் தங்குவதற்காகச் சென்றேன். அங்கு போட்டிருந்த நான்கு நாற்காலிகளில், கருணாநிதியும் வேறு இரண்டு பேரும் உட்கார்ந்திருந்தார்கள். அந்தக் காலியான நாற்காலியில் நான் போய் உட்கார்ந்தேன். கருணாநிதியைப் பார்த்து, "என்னை நினைவுபடுத்திக் கொள்ள முடிகிறதா?" என்று கேட்டேன். கருணாநிதி சிறிது நேரம் யோசித்து, அங்கு உட்கார்ந்திருந்த இரண்டு பேரிடமும், "ஐயாதான் எனக்கு ஆறு மாதத் தண்டனை கொடுத்தவர்" என்று அறிமுகப்படுத்தினார். பிறகு அவர் காப்பி கொண்டு வரச் சொல்லி, நாங்கள் நான்கு பேரும் சாப்பிட்டோம். கருணாநிதியின் மனைவியாரும் தூரத்தில் உட்கார்ந்து கொண்டு, ஏதோ படித்துக் கொண்டிருந்தார்கள். பிறகு கருணாநிதி என்னைப் பார்த்து, "உங்களை ஜெயிலில் நினைத்துக் கொள்வோம்" என்றார். "எதற்காக?" என்றேன். அதற்கு அவர், "நீங்கள் விசாரணை செய்த போது எங்கள் தொண்டர்களில் ஒருவனைப் பார்த்து, 'நீ எந்த பாட்சைச் சேர்ந்தவன்?' என்று கேட்டீர்கள். அதற்கு அவன் 'கருணாநிதி பாட்ச்' என்று பதில் சொன்னான். என்னைச் சேர்ந்த ஆறு பேருக்கும் ஆறு மாத கடுங்காவல் சிறைத் தண்டனை அளித்தீர்கள். இதைத்தான் நாங்கள் ஜெயிலில் அவனைப் பார்த்து, 'நீ மாஜிஸ்திரேட்டிடம் உண்மையைச் சொல்லி இருந்தால், உனக்கு மூன்று மாத சிறைத் தண்டனைதான் கிடைத்திருக்கும்' என்று சொல்லுவோம்" என்று சொன்னார். "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர் தாமும் தம் மனைவியாரும் பெங்களூர் போவதாகச் சொன்னார். இதற்குள் ரயில் வருவதாக மணிச் சப்தம் கேட்டது. உடனே கருணாநிதியிடம் விடைபெற்றுக் கொண்டு வந்து விட்டேன்.

இவைதான் எனக்கும் கருணாநிதிக்கும் நடந்த உரையாடல். வேறு எதுவும் நடக்கவில்லை. ஆகவே கருணாநிதி குங்குமத்தில் எழுதி இருப்பது போல் நான் ஒன்றும் பேசவில்லை. கருணாநிதியை ஹீரோ ஆக்கியது நானும் இல்லை; ராஜாஜியும் இல்லை. சந்திரசேகர் உடையார்தான். குங்குமத்தில் வெளியிட்டது எல்லாம் முற்றிலும் பொய். ராஜாஜிக்குக் களங்கம் விளைவிக்கும் நோக்கத்தோடு கருணாநிதி இதை எழுதி இருக்க மாட்டார் என்று நான் நினைக்கிறேன். அதிலும் நீதித் துறையில் ராஜாஜி குறுக்கிட மாட்டார். மேலும் முன்பின் தெரியாத என்னை அவர் போனில் கூப்பிட்டு, நீதி வழங்குவதில் அவர் கட்டளையிட்டார் என்பதை எவரும் நம்பவும் மாட்டார்கள். என் பெயர் அவதானமாக — அர்த்தமில்லாதபடி அதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ராஜாஜி அவர்கள் அரசியல் ஞானி; உலகம் போற்றும் உத்தமர்.



நான் அரசியல்வாதி இல்லை. மேலும் நான் ஓர் ஓய்வுபெற்ற சர்க்கார் ஊழியன். நான் பெரிய மனிதனும் இல்லை. எனக்கும் ராஜாஜிக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. அவருடைய சொந்த ஊர் சேலம்.

என்னுடைய சொந்த ஊர் திண்டுக்கல். ஆகவே முன்பின் தெரியாத என்னிடம் கட்டளையிட்டார் என்பது உண்மைக்கு மாறானது.

இது சம்பந்தமாக முதல்வர் டாக்டர் கருணாநிதி அவர்களுக்கு 07.06.90ம் தேதியிலும் 18.09.90ம் தேதியிலும் கடிதங்கள் எழுதி இருக்கிறேன். அவரும் அவைகளைப் பெற்றிருக்கிறார். அந்தக் கடிதங்களில் என்னை முதல்வர் கூப்பிட்டு விசாரித்தால் அவருக்கு உண்மை தெரியும் என்றும் எழுதி இருக்கிறேன். குங்குமம் ஆசிரியருக்கும் இதைப் பற்றி 21.08.90ம் தேதியில் கடிதம் எழுதி இருக்கிறேன். அவரும் அந்தக் கடிதத்தைப் பெற்றிருக்கிறார். அவரிடம் இருந்தும் இதுவரை பதில் வரவில்லை. 18.09.90ம் தேதியில் முதல்வருக்கு எழுதிய கடிதத்தில் அப்போது அரியலூர் ஆர். டி. ஓ. வாக இருந்து, தற்போது ஓய்வு பெற்று சென்னையில் வசிக்கிற திரு. பசுபதி ஐ. ஏ. எஸ். அவர்களையும் கூப்பிட்டு, எங்கள் இருவரையும் விசாரித்தால் உண்மை நன்றாகத் தெரியும் என்றும் எழுதி இருக்கிறேன். இந்தக் கடிதத்தையும் முதல்வர் 19.09.90ம் தேதியில் பெற்று இருக்கிறார். இதற்கும் முதல்வரிடமிருந்து பதில் வராவிட்டால் எனது உண்மை நிலையைத் தெளிவுபடுத்தி பத்திரிக்கைகளில் எழுதுவதை விட வேறு வழியில்லை என்பதைப் பணிவுடன் முதல்வருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன் என்றும் எழுதி இருக்கிறேன்.

முதல்வர் மக்களுக்கு — குறிப்பாகத் தமிழ் மக்களுக்கு அநேக நல்ல காரியங்களைச் செய்து வருகிறார். அவருடைய புகழை மாசுப்படுத்தவோ அல்லது அவரைப் புண்படுத்தவோ நான் இதை எழுதவில்லை. என் விருப்பம் எல்லாம் கல்லக்குடி ஆர்ப்பாட்டத்தில் நடந்த உண்மைச் சம்பவங்களை முதல்வர் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான்.

மேலும் இங்கு எழுதியதை வெளியிடாவிட்டால் நமது பாரத நாட்டில் பிறந்து, நமக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தவர்களில் ஒருவரும், அரசியல் ஞானியும் உலகம் போற்றும் உத்தமரான மறைந்த ராஜாஜி அவர்களுக்கு நான் துரோகம் செய்பவனாக ஆவேன். மேலும் மக்கள் என்னை நிந்திக்காமல் விட மாட்டார்கள்.

— பி. எம். நாராயணசாமி.

## கவலைப்படாத கர்நாடக எம்.எல்.ஏக்கள்...



கர்நாடகத்தில் லோக் அயுக்தா (புகார்களை விசாரிக்கும் நீதிமன்றம்) என்னும் அமைப்புக்கு அமைச்சர்களும், எம். எல். ஏக்களும் ஆண்டுதோறும் தங்களுடைய, மற்றும் தங்கள் நெருங்கிய உறவினர்களுடைய சொத்து விவரங்களைத் தெரிவிக்க வேண்டும். ஆனால் 225 அங்கத்தினர்களில் 182 பேர் தெரிவிக்கவில்லை. (பெரும்பாலோர் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள்). இவர்களில் சபாநாயகரும், நான்கு அமைச்சர்களும் அடக்கம். நினைவுபடுத்தியும் பயனில்லாததால், அந்த நீதிபதி அவர்களுடைய பெயர்களை முக்கிய பத்திரிகைகளில் வெளியிட்டார். அதன் பிறகும் அவர்கள் கவலைப்படவில்லை. காரணம், தண்டிக்கும் அதிகாரம் எதுவும் சட்டப்படி அந்த நீதிபதிக்கு வழங்கப்படவில்லை.

ஆதாரம்: 'ஹிந்து' கட்டுரை.
தகவல்: அ. ஷண்முகசுந்தரம்.

பொதுவுடைமைக் கொள்கை பற்றி ஒரு சமயம் பெர்னார்ட்ஷா லண்டனில் சொற்பொழிவாற்றும் போது, "மக்களே, இப்போதே நீங்கள் கிளம்பிப் பண மூட்டைகளைப் பலாத்காரமாகக் கொள்ளையடியுங்கள்!" என்று ஆவேசமாகக் கூறிவிட்டுக் கூடவே, "ஆனால் வெளியே நிற்கும் ரோல்ஸ் ராய்ஸ் காரை மட்டும் ஒன்றும் செய்து விடாதீர்கள். அது என்னுடையது" என்றார்.

— எஸ். சாகுல் ஹமீது.

தினமலர்

# வாரமலர்

நவ 4,
இதழில்
ஆரம்பம்!

# என்.சி.மோகன்தாஸ்

## தொடர்கதை

# கலகலத்துக் கொண்டிருக்கும் கர்நாடகக் காங்கிரஸ்

—நேரடி ரிப்போர்ட்



• "ராஜினாமா செய்!" — முதல்வர் வீட்டின் எதிரே எம். எல். ஏக்கள் கோஷம்!

அக்டோபர் ஆறாம் தேதி மாலை பெங்களூருக்கு வருகிறார் ராஜீவ் காந்தி. ஒரு வார காலமாகக் கோலார், ராம்நகர், சென்னப் பட்டணம் போன்ற இடங்களில் நடை பெற்று வரும் வகுப்புக் கலவரங்கள் பெங்களூருக்கும் பரவி விடுமோ என்று மக்கள் பயந்து கொண்டிருந்த நேரம் அது. வந்தவுடன் பக்கவாத நோயால் பாதிக்கப் பட்டிருக்கும் முதல்வர் வீரேந்திர பாட்டீலைச் சென்று பார்க்கிறார் ராஜீவ். தமக்கு உடல் நலம் குன்றியிருந்தாலும் பாதிக்கப் பட்ட இடங்களுக்கு மற்ற அமைச்சர்களை அனுப்பித் தேவைப்படும் உத்தரவுகளைத் தாம் அவ்வப்போது பிறப்பித்துக் கொண்டிருப்பதாக ராஜீவிடம் விளக்குகிறார் பாட்டீல்.

மறுநாள் சென்னப்பட்டணம் சென்று கலவரப் பகுதிகளைப் பார்வையிட்டுவிட்டு மீண்டும் பெங்களூர் வந்து பாட்டீலைச் சந்திக்கிறார் ராஜீவ். பிறகு, அன்று மாலை சென்னையில் நடக்கும் எம். ஜி. ஆர். சிலைத் திறப்பு விழாவில் கலந்து கொள்வதற்காகப் புறப்பட்டுப் பெங்களூர் விமான நிலையத்திற்கு வருகிறார். வந்தவர் சென்னை விமானத்தில் ஏறுவதற்குள், அவசரம் அவசரமாகப் பத்திரிகையாளர்களிடம், பாட்டீலின் உடல்நிலை காரணமாக அவர் ராஜினாமா செய்வாரென்றும், புதிய முதல்வரை அக்டோபர் பத்தாம் தேதியன்று கர்நாடக காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுப்பார்களென்றும் கூறிவிட்டு விமானமேறி விடுகிறார்!

"ராஜீவ் காந்தியின் இந்த அறிவிப்பு சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்த கதையானது மட்டுமல்ல; அவருடைய சர்வாதிகாரப் போக்கையும் வெட்டவெளிச்சமாக்கி விட்டது" என்று வர்ணித்தார் பத்திரிகையாளர் குல்கர்னி. "வீரேந்திர பாட்டீலின் உடல்நலக் குறைவுதான் தமது அறிவிப்புக்கான காரணம் என்று ராஜீவ் சொன்னது

* ஜனாதிபதி ஆட்சி அறிவிக்கும் ஆளுனரிடம் சில கேள்விகள்.





* பங்காரப்பா

• சூழப்பத்தில் நடந்த எம். எல். ஏக்கள் கூட்டம்....

உண்மையாகக் கூட இருக்கட்டும்; அதற்காகப் பாட்டீலிடம் கூடக் கலந்து பேசாமல் இப்படியோர் அறிவிப்பைத் திடுதிப்பென்று செய்ததன் மூலம் உடல் நலம் குன்றிய பாட்டீலின் மனத்தில் வேலைப் பாய்ச்சி, தமக்கும், மனிதப் பண்புக்கும் சம்பந்தமே இல்லையென்பதை நிரூபித்து விட்டார் ராஜீவ்...!'' என்றார் மைசூரைச் சேர்ந்த ஓய்வு பெற்ற அரசு ஊழியரான நாகராஜன்.

''ராஜீவ் காந்தியின் இந்த அறிவிப்புக்கு வீரேந்திர பாட்டீலின் உடல்நிலை மட்டும் தான் காரணமா?'' என்று கர்நாடகக் காங்கிரஸ் தலைவர் ஆஸ்கார் பெர்னாண்டஸிடம் கேட்ட போது, ''ஆமாம், அது தான் காரணம்'' என்றார்.

''இதுபோன்ற நிலை எங்கள் மாநிலத்தில் இருந்திருக்கிறதே?'' என்று, எம். ஜி. ஆர். உதாரணத்தை எடுத்துக் காட்ட, ''உங்கள் மாநிலத்தின் சூழ்நிலையே வேறு'' என்றார்.

''அப்படியானால் இதைப் பாட்டீலின் சம்மதத்துடனேயே செய்திருக்கலாமே?''



**ஆளுனர் பானுபிரதாப் சிங்**

**முன்பு ஜனதாவில் இருந்த சிங், 1977 இல் மத்தியில் விவசாய அமைச்சராக இருந்தவர். விவசாயிகளின் பிரச்னைகளை நன்கு புரிந்து கொண்டிருக்கும் இவர் ஒரு விவசாயப் பொருளாதார நிபுணரும்கூட. பல பத்திரிகைகளில் விவசாயம் சம்பந்தப்பட்ட நீண்ட கட்டுரைகள் எழுதியிருப்பவர். ஜனதா தளம் ஆட்சிக்கு வரவே மீண்டும் முன்னணிக்கு வந்திருப்பவர். இவரது தலைமையில் விவசாயம் பற்றி ஒரு கமிட்டி அமைக்கப்பட்டு, அதன் பொரிகைகள் வழக்கப்படி தூசி போர்த்திக் கொண்டு உறங்குகின்றன.**

என்ற போது, "தலைமை சொல்லி விட்ட தல்லவா...? செய்துதான் ஆக வேண்டும்..." என்று நழுவினார் அவர். கட்சியின் மேலிடப் பார்வையாளராக வந்திருந்த மூப்பனார் இதுபற்றிப் பத்திரிகையாளர்களிடம் பேசவே மறுத்து விட்டார்!

இந்தச் சமயத்தில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது கர்நாடக காங்கிரஸ் கட்சிக்குள் புகைந்து கொண்டிருக்கும் உட்கட்சிப் பூசல்கள். கிட்டத்தட்ட எல்லாக் கோஷ்டிகளுக்கும் ஏற்ற தலைவராகப் பாட்டீல் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், அவரைப் பற்றி அவ்வப்போது தலைமைக்குக் 'கோள்' மூட்டிக் கொண்டிருந்தார்கள் அந்தந்தக் கோஷ்டித் தலைவர்கள். முக்கியமாக செப்டம்பர் கடைசி வாரத்தில், டெல்லியில் கர்நாடக காங்கிரஸ் கட்சியின் தலைவர் ஆஸ்கார் பெர்னாண்டஸும் கர்நாடகத்தின் காங்கிரஸ் புள்ளி, ஜாபர் ஷெரிப்பும் ராஜீவோடு நடத்திய ஆலோசனை குறிப்பிடத்தக்கது.

மூன்று மாநிலங்களில் ஆளும் காங்கிரஸ் முதல்வர்கள் தன்னைச் சிறிதும் மதிக்காமல் மன்னர்கள் போல் செயல்படுவதாக ராஜீவ் விசனித்துக் கொண்டிருந்தார். அதில் ஒருவரைத் 'தூக்கிவிட'க் கர்நாடக காங்கிரஸ்காரர்கள் வழி சொல்லவே, அதைச் செயல்படுத்துவதில் ஆர்வமாக இருந்தார் அவர். 'பாட்டீலுக்கு உடம்பு சரியில்லை. அவரால் செயல்பட முடியாது" — இது ஒன்றுதான் ராஜீவ் சொல்ல இருந்த சமாதானம். ஆனால் வகுப்புக் கலவரங்களும் சேர்ந்து கொள்ளவே அவரது செய்கைக்கு நியாயங்கள் கற்பிக்கப்படும் என்று நம்பினார்.

ஆரம்பத்திலிருந்தே காங்கிரஸ் தலைமை வீரேந்திர பாட்டீலுக்கு ஏதாவது தொல்லைகள் கொடுத்துக் கொண்டே இருந்தது. மாநிலங்களில் கோஷ்டிப் பூசல்களுக்குத் தூபம் போட்டு அதில் குளிர் காய்வதையே வழக்கமாகக் கொண்டிருந்த காங்கிரஸ் தலைமை, கர்நாடகத்தையும் விட்டு வைக்கவில்லை. முதலில் மந்திரி சபைப் பட்டியலை அங்கீகரிக்கவே மூன்று நாட்கள் எடுத்துக் கொண்டது. அதன் பின்னர், ராஜ்ய சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் போதும் தனது கைவரிசைகளைக் காட்டியது. மந்திரி சபையைப் பாட்டீல் விஸ்தரித்ததற்குக் காரணம் 'பங்காரப்பாவைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்' என்று தலைமை நச்சரித்தது தான்.

பாட்டீல் மீது ராஜீவுக்கு வெறுப்பு ஏற்படப் பல காரணங்கள். சட்டசபைத் தேர்தலின் போது ராஜீவ் சென்ற இடங்களில் எல்லாம் கூட்டம் மிகவும் குறைவாகவே கூடியது. ஆனால் அனுபவமிக்க பாட்டீல், தமது தீவிர பிரசார முறைகளாலும், தேர்தல் தந்திரங்களாலும், கர்நாடகத்தில் காங்கிரஸை ஆட்சியில் அமர்த்தினார். மேலும், 1978 இல் தமது அன்னை, இந்திராவை எதிர்த்து ஜனதா கட்சி சார்பில் சிக்மகளூரில் போட்டியிட்டவர் பாட்டீல்" என்ற எண்ணம் வேறு ராஜீவைக் குடைந்து கொண்டிருந்திருக்கலாம்.

எல்லாமாகச் சேர்ந்து கொள்ள, 'புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார்' என்று ராஜீவ் மிகச் சுலபமாக அறிவித்துவிட்ட போதிலும் அது நிஜத்தில் சுலபமாகவே இல்லை. கர்நாடக காங்கிரஸுக்குள் அத்தனை கோஷ்டி. பெருந்தலைகளும் ஏராளம். குண்டுராவ், ஜாபர் ஷெரிப், எஸ்.எம். கிருஷ்ணா, மார்கரெட் ஆல்வா, ஜனார்த்தன் பூசாரி, கே. எச். பட்டீல், ரங்கநாத், சங்கரானந்த், என்று பட்டியல் நீண்டு கொண்டே போகும். இது போதாதென்று, ஜாதிப் பிரிவினைகள் வேறு. மொத்தம் உள்ள 176 காங்கிரஸ் உறுப்பினர்களில் 41 பேர் லிங்காயத்து சமூகத்தைச் சேர்ந்தவர்கள். 31 பேர் வொக்கலிகா பிரிவு. மீதம் உள்ளவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள், மைனாரிட்டிகள், பிராமணர்கள். பாட்டீல் லிங்காயத்து வகுப்பைச் சேர்ந்தவர். பங்காரப்பா சமுதாயத்தின் எளிய பிரிவைச் சேர்ந்தவர். இவருக்கு ஜாதிகளின் பின்பலம் கிடையாது.

இந்தச் சூழ்நிலையில் முதல்வரைத் தேர்ந்தெடுப்பது சுலபமா என்ன? போதாக் குறைக்கு ஒருபுறம் வீரேந்திர பாட்டீலே முதல்வராக நீடிக்க வேண்டுமென்று



• சங்கரானந்த்

சொல்லுகிற அதே நபர்கள், மறுபுறம் வீரேந்திர பாட்டீல் ராஜிநாமாச் செய்ய வேண்டும் என்கிற கோஷ்டியுடனும் கலந்து கொள்ளும் குழப்பமான நிலை.

உடல்நிலை சரியில்லாத பாட்டீல் என்ன சொல்கிறார்? என்று தெரிந்து கொள்வதற்காக, ரேஸ்கோர்ஸுக்குப் பக்கத்தில் இருக்கும் அவரது இல்லமான 'காவிரி'க்குச் சென்றோம். கடுமையான பாதுகாப்போடு இருந்தது அவரது வீடு. காம்பவுண்டு சுவருக்கு வெளியில், "பாட்டீலே ராஜிநாமா செய்" என்றும், "ராஜீவ் காந்தி ஜிந்தாபாத்" என்றும் கோஷங்கள் எழுந்தன. கோஷம் போட்டுக் கொண்டு வந்தவர்கள் எல்லோரும், காங்கிரஸ்



• ஆஸ்கார் பெர்னாண்டஸ்

எம்.எல்.ஏக்கள். 'மொத்தம் 145 எம். எல். ஏக்கள் இருக்கிறார்கள்" என்றார் பாபுராஜ். அந்தக் கூட்டத்துக்குத் தலைமை ஏற்று' வந்த கர்நாடகா மாநில காங்கிரஸ் தலைவர் ஆஸ்கார் மட்டுமே பாட்டீலின் வீட்டுக்குள் சென்றார். சென்றவர் உடனே திரும்பினார். "பாட்டீல் தூக்க மாத்திரை சாப்பிட்டிருப்பதால் தற்போது யாரையும் சந்திக்கும் நிலையில் இல்லை" என்று டாக்டர் சொல்லிவிட்டார். ஆகையால் நண்பர்களே, நாம் அமைதியாகத் திரும்பிச் செல்வோம்" என்று சிறிய உரையாற்றி விட்டுக் கிளம்பிச் சென்றார் அவர். எம். எல். ஏக்கள் கூட்டம் மேலும் பத்து நிமிடங்கள் கோஷமிட்டுவிட்டுப் பின்பே கலைந்தது.

ஆஸ்கார் பெர்னாண்டஸ், முதல்வரைச் சந்திக்க முடியாவிட்டாலும், முதல்வரை ஆதரிக்கும் எம். எல். ஏக்களும், ஏன், பல தொழில் அதிபர்களும்கூட, பாட்டீலைச் சிரமமில்லாமல் பார்த்துவிட்டுச் சென்றார்கள். "முதல்வருக்கு வந்திருப்பது விரைவில் குணமாகக் கூடிய பக்கவாதம்தான். உடற்பயிற்சிகளைத் தொடர்ந்து செய்தால்



• குண்டுராவ்

குணமாகிவிடும்" என்றார் அவரைக் கவனித்து வரும் டாக்டர் மகேந்திரன். ஆனால் பாட்டீலுக்குத் தொடர்ந்து இரண்டு நிமிடங்கள் கூடப் பேச முடியாதபடி தடங்கல்கள் ஏற்படுகின்றன. சக்கர நாற்காலியில்தான் செல்ல முடிகிறது. வலது கையைத் தூக்க முடியவில்லை. இதுதான் அவரது தற்போதைய உடல்நிலை. ஆனால் நாளும், பொழுதும் முன்னேற்றம் தென்படுவதாகச் சொல்கிறார் டாக்டர். பாட்டீலோ, "தன்னை விலகிக் கொள்ளும்படி ராஜீவ் கேட்டுக் கொள்ளவே இல்லை" என்று சொல்கிறார். அறுபதுக்கும் அதிகமான எம்.எல்.ஏக்களின் ஆதரவு தமக்கு இருப்பதாக உறுதியாய்ப் பேசுகிறார்.

இந்த நிலையில்தான் கர்நாடக சட்டசபையைத் தாற்காலிகமாகச் செயலிழக்கச் செய்கிறார் கவர்னர் பானு பிரதாப் சிங். "கவர்னரின் இந்தநடவடிக்கைக்குக்கர்நாடக

ஆளுங்கட்சியில் ஏற்பட்ட குழப்பம் மட்டுமே காரணம் அல்ல; முன்பு பொம்மை ஆட்சியைக் காங்கிரஸ் கவிழ்க்க வில்லையா? அதற்கான பதிலுக்குப் பதில் நடவடிக்கையாகத்தான் இந்தச் சந்தர்ப் பத்தை ஜனதா தளம் பயன்படுத்திக் கொண்டு விட்டது என்பதுதான் உண்மை" என்றும் சிலர் சொல்கிறார்கள்.

"தலைமையின் வார்த்தைக்குக் கட்டுப் படாமல் தாம் ராஜிநாமா செய்ய முடியாது என்று பாட்டீல் சொன்னதற்குக் காரணம், ஜனதா தளத் தலைவர்கள் பாட்டீலுக்குக் கொடுக்கும் ஆதரவுதான். இல்லையென் றால் நாங்களெல்லாம் சந்திக்கச் சென்றால், அவரது உடல் நிலையைக் காரணம் காட்டிச் சந்திக்க முடியாமல் செய்யும் டாக்டர்கள், ஜனதா தளத்திலிருந்து ஹெக்டே, நஞ்சே கவுடா, ஜீவராஜ் ஆல்வா போன்றவர்கள் செல்லும் போது மட்டும் தாராளமாகச் சந்தித்து வருவது எப்படி?'' என்றார் ஆஸ்கர் பெர்ணாண்டஸ்.

அவர் சொன்னதை உண்மையாக்கு வது போலவே, "காங்கிரஸ் அல்லாத மந்திரி சபை அமைத்தால் அதற்கு ஜனதாதளம் ஆதரவளிக்கும்'' என்று கர்நாடக ஜனதா தளத் தலைவரும் கூறியிருக்கிறார். ஆக, பாட்டீல் கட்சித் தாவல் தடுப்புச் சட்டத்தில் சிக்காமல் கணிசமான எம். எல். ஏக்க ளோடு வெளியே வந்தால் அதற்குக் கர்நாடக ஜனதா தளம் ஆதரவளிக்கத் தயாராக இருக்கிறது என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.

இந்த நிலையில்தான் ஒரு வழியாகப் பங்காரப்பா தேர்ந்தெடுக்கப்பட்டிருக் கிறார். இவர் சென்ற வருடம் முதலே பாட் டீலுடன் மோதி மோதித் தோல்வியுற்றுத் தற்போது வெற்றி கண்டிருப்பவர். ஆனால் இந்த வெற்றி நிரந்தரமானதுதானா என் பது கேள்விக் குறிதான். காரணம், குண்டு ராவும், சங்கரானந்தும்.

இந்த இருவரில், "குண்டுராவுக்குக் காங் கிரஸ் எம். எல். ஏக்கள் சிலர் மத்தியில் நல்ல பெயர் இருந்தாலும் அவர் உயர் ஜாதிக்காரராக இருப்பதால் அவரை ஒதுக்க வேண்டுமென்று சொல்பவர்களும் இருக் கிறார்கள். அதோடு ராஜீவ் காந்தியின் நல் லெண்ணப் பட்டியலிலும் குண்டுராவ் இல்லை...'' என்றார் சுப்பராவ் நாயுடு என்ற காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

மீதியிருப்பது சங்கரானந்த். இவர், போபர்ஸ் பீரங்கி ஊழல் விஷயத்தில் பாராளுமன்றக் கூட்டுக் குழுவுக்குத் தலைமை தாங்கி, "ஒரு குற்றமும் நடக்க வில்லை,'' என்று தீர்ப்பு வழங்கி, முழுப் பூசணியைச் சோற்றில் மறைக்க முயன்றவர். அந்த ஒரு செயலுக்காகவே தமக்கு முதல்வர் பதவி கிடைக்கும் என்று எதிர் பார்த்துக்'கொண்டிருப்பவர்.

இதற்கிடையில் தமக்கு வந்த பக்கவாத நோயோடும், ஏற்பட்ட அவமான உணர் வோடும் போராடிக் கொண்டிருக்கும் வீரேந்திர பாட்டீல். ஆக மொத்தம் கூட்டிக் கழித்துப் பார்க்கும் போது, முடிவாக எழும் எண்ணம் இதுதான்:

எல்லாக் கோஷ்டிகளையும் ஓரளவுக்கு அரவணைத்துக் கொண்டு சென்ற பாட்டீ லுக்கே இந்தக் கதிதான் என்றால், ஓரளவுக் குப் போர்க்குணமும் மூர்க்கத்தனமும் கொண்ட பங்காரப்பா மட்டும் நீடித்திருக்க விட்டுவிடுவார்களா என்ன?

— ப்ரியன்

அட்டையில் கவர்னர் பானுபிரதாப் சிங், வீரேந்திர பாட்டீல் மற்றும் பாட்டீலுக்கு எதிராகப் போர்க் கொடி தூக்கிய எம். எல். ஏக்கள் கூட்டம். வண்ணப்படங்களும் படங்களும்: உத்ரா

அடுத்த இதழில்...

●● சமாதான வீரருக்கு நோபெல் பரிசு!

●● சாத்தூர்த் தொகுதி விசிட்!



## நவம்பர் 15இல் நாட்டின் நிலை என்ன? சரியான கணிப்புக்குப் பரிசு ரூ.250!

**உ**ங்கள் அரசியல் பார்வையின் கூர்மையைப் பரிசோதிக்க இதோ ஓர் எளிய ரசமான போட்டி!

கீழே ஒன்பது கேள்விகள் உள்ளன. ஒவ்வொரு கேள்விக்கும் நான்கு விடைகள். இவற்றுள் ஒன்றை மட்டும் டிக் (✓) செய்து இந்தப் பக்கத்தைக் கத்திரித்து எடுத்து உறையிலிட்டு எங்களுக்கு அனுப்பவும்.

**முடிவு தேதி: 5.11.90.**

நவம்பர் 16 ஆம் தேதி உறைகள் பிரிக்கப்படும். நவம்பர் 15 ஆம் தேதி அரசியல் நிலவரப்படி பதில்கள் பரிசீலிக்கப்படும்.

அதிகபட்சமாகச் சரியான விடைகள் டிக் (✓) செய்தவருக்குப் பரிசு ரூ. 250. ஒருவருக்கு மேல் அதிகபட்ச சரியான விடைகள் டிக் செய்திருந்தால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.

**நவம்பர் 15 இல்......**

1. பிரதமராக யார் இருப்பார்?

- ☐ வி. பி. சிங்
- ☐ சந்திரசேகர்
- ☐ ராஜீவ் காந்தி
- ☐ மூவரும் அல்லாத வேறு ஒருவர்

2. தேவிலாலின் நிலைமை என்ன?

- ☐ மந்திரி சபையில் இருப்பார்
- ☐ ஜனதா தளத்திலேயே இருக்க மாட்டார்.
- ☐ கட்சியில் முக்கிய பொறுப்பில் இருப்பார்.
- ☐ மாநில அரசியலுக்குத் திரும்பி விடுவார்.

3. அ. இ. மு. க. தலைமையகம்......

- ☐ 'ஜெ'விடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும்.
- ☐ திருநாவுக்கரசு கோஷ்டியினரிடம் போய்விடும்.
- ☐ பூட்டப்பட்ட நிலைமை நீடிக்கும்.
- ☐ மீண்டும் ஒரு கைப்பற்றல் முயற்சி நடந்திருக்கும்.

4. கர்நாடகாவில்...

- ☐ பங்காரப்பா ஆட்டம் கண்டிருப்பார்.
- ☐ வீரேந்திர பாட்டீல் மீண்டும் முதல்வர் ஆவார்
- ☐ குண்டுராவ் முதல்வர் ஆவார்.
- ☐ காங்கிரஸ் பிளவுபடும்.

5. தமிழக அரசியலில்......

- ☐ ஜெ மீண்டும் ஒருமுறை ராஜினாமா நாடகம் நடத்தி இருப்பார்.
- ☐ தி. மு. க. மந்திரி சபையில் ஏதேனும் மாற்றம் நிகழும்.
- ☐ ஜெ. அணியிலிருந்து வீரப்பன் விலகியிருப்பார்.
- ☐ திருநாவுக்கரசு அணி ஜெயுடன் சமாதானம் செய்து கொண்டிருக்கும்.

6. நவம்பர் 15 ஆம் தேதி மாலைப் பத்திரிகைகளில் பிரதான தலைப்புச் செய்தியில் இடம் பெறப் போகிறவர்:

- ☐ கருணாநிதி
- ☐ ஜெயலலிதா
- ☐ தேவிலால்
- ☐ மூவரும் இல்லை.

7. ராமஜென்ம பூமி விவகாரத்தில்...

- ☐ ஹிந்துக்கள் வேறு இடத்தில் கோயில் கட்டத் தீர்மானிப்பார்கள்.
- ☐ முஸ்லிம்கள் மஸ்ஜித்தை அப்படியே பெயர்த்து எடுத்துப் போய் வேறு இடத்தில் நிறுவச் சம்மதிப்பார்கள்.
- ☐ இப்போதுள்ள மசூதிக்கு இடைஞ்சல் இன்றி அதன் மேலே மாடி போல் அமைத்து அதில் கோவில் அமைய வழி வகுக்கப்பட்டிருக்கும்.
- ☐ நிலைமையில் மாற்றம் இன்றி இழுபறி நீடித்து வாக்குவாதமும் பூசல்களும் வலுக்கும்.

8. சந்திரசேகர் —

- ☐ ஜனதா தளத்திலிருந்து விலகுவார்.
- ☐ தனிக்கட்சி அமைப்பார்.
- ☐ ராஜீவோடுசேர்ந்துகொண்டுதேசிய முன்னணி அரசைக்கவிழ்க்கமுயற்சி செய்வார்.
- ☐ மேற்சொன்ன எதுவும் நடக்காது.

9. சதாம் ஹுசைன்

- ☐ குவைத்திலிருந்து வாபஸ் ஆவார்.
- ☐ போர் வெடிக்கக் காரணமாவார்.
- ☐ இழுபறி நிலை நீடிக்கச் செய்வார்.
- ☐ கொல்லப்பட்டிருப்பார்.

என் பெயர்: ....................

விலாசம்: ....................

....................



மெஜாரிட்டியை நிரூபிக்க 15 நாள் கெடு... ஞாபகம் இருக்கட்டும்!
பங்காரப்பா
இனக்கலவரமெல்லாம் தலைவிரிச்சாடுது, என்ன பண்ணப் போறீங்க?
அமைச்சர் பட்டியல்ல... என்னையும்... சேர்... சேர்...
கருணாநிதி
அதெல்லாம் கிடக்கட்டும்... முதல்ல எங்களுக்குத் தண்ணீர் விடற வழியைப் பாருங்க!
என்னைக் கேட்காமே எதுவும்... மூச்!




போகாதே போகாதே என் கணவா... பொல்லாத சொப்பனம் நானும் கண்டேன்...
மதக் கலவரம்
வி.பி.சிங்
அத்வானி
ரத யாத்திரை




கருணாநிதி
அவங்க
எதிர்த்து எழுதினாங்க... இவங்க கொளுத்துறாங்க... அதுக்கு நான் என்ன பண்றதாம்?
பத்திரிகைச் சுதந்திரமாவது, வெண்ணையாவது? கொளுத்துங்கடா!
எக்ஸ்பிரஸ் தினமணி பத்திரிகைகள்



# கல்கி

1990 அக்டோபர் 28
மலர் : 49 இதழ் : 13
பிரமோதூத ஐப்பசி 11



## ரத யாத்திரை, ரண கள யாத்திரையாக வேண்டாம்!

'உலக அமைதியை நிலைநாட்ட உழைத்தவர்' என்ற முறையில் கோர்பசேவ் நோபெல் பரிசு பெறுகிறார். 'நாட்டில் அமைதியைக் குலைக்கப் பாடுபட்டவர்' என்ற முறையில் நோபெல் பரிசு ஒன்று வழங்கப்படுமானால், நமது தேசத் தலைவர்களிடையே அதை யாருக்கு வழங்குவது என்று புரியாமல், நோபெல் பரிசுக் கமிட்டி திணறித் திண்டாடிப் போகும்!

அக்டோபர் 24ம் தேதி உத்தரப் பிரதேச எல்லையில் அத்வானியின் ரதம் நுழைகிறது. அக்டோபர் 30ல் ராம ஜென்ம பூமியில் கோயில் அமைக்கும் பணி தொடங்கும் என்பதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்பாகவே ஏதேனும் அற்புதம் நிகழ்ந்து, நல்லறிவு நிலவி, தேவையற்ற மோதல்கள் — மதக் கலவரங்கள் — தடுக்கப்படுமானால் ராமருக்கும் அல்லாவுக்கும்தான் நன்றி கூற வேண்டும்.

ராம ஜென்ம பூமியில் ஏற்கெனவே ஒரு கோயில் இருந்ததாகவும் அது பாபரால் இடிக்கப்பட்டு அங்கே மசூதி எழுந்ததாகவும் கூறப்படுகிறது. பிற்காலத்தில் அங்கே, மசூதிச் சுவரையொட்டிய ஒரு மேடையில் திடுமென ஒருநாள் ஒரு ராமர் சிலை தோன்றியது. அதனை நீக்க முஸ்லிம்கள் எடுத்த முயற்சி பலிக்கவில்லை. நீதிமன்றத் தீர்ப்பு, சிலை அங்கே இருக்கவும் பூஜைகள் நடக்கவும், சற்றுத் தொலைவில் இரும்புக் கம்பி கேட்டுகளுக்கு வெளியே இருந்தவாறு மக்கள் தரிசனம் செய்யவும் வழிவகுத்தது. பின்னர் இந்த கேட்டும் திறக்கப்பட்டது.

இப்போது அந்தச் சிலைகளை நீக்கி வேறு இடத்தில் நிறுவிக் கொள்ளுமாறு முஸ்லிம் தீவிரவாதிகள் கூற, 'மசூதியைப் பெயர்த்து எடுத்துப் போய் வேறு இடத்தில் புனர் நிர்மாணம் செய்து கொள்ளுங்கள்' என்று ஹிந்து தீவிரவாதிகள் பதிலுக்குச் சொல்ல, ஒரே டென்ஷன்! இருதரப்பிலும் மக்களிடையே உணர்ச்சிகள் பொங்க, அந்த உணர்ச்சிகளைத் தங்களுக்குச் சாதகமாகத் தங்கள் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளப் பயன்படுத்தும் அரசியல், மற்றும் மதத் தலைவர்கள்!

இவர்களில் ஒருவருக்குக் கூட, 'ராமஜென்ம பூமி — பப்ரி மஸ்ஜித்' என்பது இந்து முஸ்லிம் ஒற்றுமையின் சின்னமாக விளங்கட்டுமே' என்று கூறுகிற துணிவோ, நல்லறிவோ இல்லை. மக்களுக்கு வழிகாட்டி அமைதிப் பாதையில் அழைத்துச் செல்ல வேண்டிய தலைவர்கள், அந்தக் கடமையை மறந்து, மக்களின் உணர்ச்சிகளைத் தங்கள் சுய முன்னேற்றத்துக்கே உபயோகித்துக் கொள்கிறார்கள். இதை விடப் பெரிய அதர்மம் வேறு என்ன இருக்க முடியும்? இனக் கலவரம் வெடித்தால் சொல்லொணாக் கொடுமைகளுக்கு ஆளாகப் போவது இந்தத் தலைவர்கள் அல்ல; மக்களே. அதற்கான அறிகுறிகள் இப்போதே நிறையத் தோன்ற ஆரம்பித்து விட்டன.

சரித்திரத்தை யாராலும் மாற்ற முடியாது. ஆனால் நேற்றைய ஒரு தவறை இன்றைய ஒரு தவறு மூலம் சரிப்படுத்தி விட முடியாது. தவறுக்கு மேல் தவறு நடந்ததாகவே ஆகும். ஒரு கோயில் இருந்த இடத்தில் மசூதி எழுந்ததெனில் அது சரித்திரப் பாடமாக அப்படியே இருந்து விட்டுப் போகட்டுமே, என்ன தவறு? அதைப் பார்க்கும் போது, 'மறுபடியும் இதுபோன்ற தவறுகள் நேரக் கூடாது' என்ற எண்ணம்தான் அனைவரிடமும் எழ வேண்டுமே தவிர, பழிவாங்கும் உணர்வு அல்ல. என்றோ வாழ்ந்து மடிந்த மன்னர்கள் செய்த தவறுகளுக்காக இன்று சகோதரர்களாக வாழும் ஒரே நாட்டினரான நாம், ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்வதை விட முட்டாள்தனம் வேறு என்ன இருக்க முடியும்?

'ராமர் சிலை இன்று இங்கு உள்ளது போலவே தொடர்ந்து இருந்து விட்டுப் போகட்டும்; அதை நீக்க அவசியம் இல்லை' என்று முஸ்லிம் சகோதரர்கள் கூறட்டும். 'ராம ஜென்ம பூமி என்பது அயோத்தி மட்டுமல்ல; இந்தியா முழுவதுமே ராம ஜென்ம பூமிதான்' என்பதை உணர்ந்து, இந்துக்கள் அமைதி அடையட்டும். விசாலமான அயோத்தியில் பப்ரி மஸ்ஜிதை விட்டால் ராமர் கோயில் கட்ட வேறு இடமா இல்லை? சிறந்ததோர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, அற்புதமான கோயில் எழுப்பலாம். அதற்கு முஸ்லிம்களும் பொருளுதவி செய்து பெருமை அடையலாம்.

நல்லிதயங்களின் இத்தகைய எண்ணங்கள் பகற்கனவாகி விடக் கூடாது. நிறைவேறியே தீர வேண்டும். தலைவர்கள் சற்றே நிதானித்துச் சிந்தித்தால் தேசம் இருட்டிலிருந்து ஒளிக்கு வரும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# பரேடைப் போலவே கச்சிதமான கட்டுரை!

* 'தீக் குளிப்பது, தற்கொலை செய்து கொள்வது — பிளாக் மெயிலுக்குச் சமம்' என்றும், 'மக்களுக்கு விருப்பமில்லாத விஷயத்தை அவர்கள் மீது திணிப்பதும் ஒருவிதத்தில் வன்முறைதான்' என்றும் தலையங்கத்தில் சுட்டிக்காட்டி உள்ளது பாராட்டுக்குரியது. நீங்கள் குறிப்பிட்டுள்ளது போல் மண்டல் கமிஷன் அறிக்கையில் கூறப்பட்டுள்ள — "பிற்படுத்தப்பட்டவர்களுக்குச் சிறந்த கல்வியைக் கொடுத்து வாழ்க்கையின் போட்டா போட்டிகளைத் துணிவுடன் சந்திக்கத் தகுதியுள்ளவர்களாக்குவதே உண்மையான முன்னேற்றம்" என்ற மிக முக்கியமான உண்மை நிலையை அரசியல்வாதிகள் புரிந்து கொண்டு செயல்பட்டால் பிரச்னையே இல்லை!

சென்னை — 10. எஸ். கவிதா.

* ஒரு திட்டத்தை அமுல்படுத்தும் முன், அதன் நிறை, குறைகளை அலசி ஆராய்ந்து, அதன்பின் அதை நிறைவேற்ற முற்படுவதே ஆட்சியாளருக்குத் தேவையான விவேகம் என்பதை மறந்ததால், தே. மு. அரசு தற்போது விழி பிதுங்கி நிற்பதைத் தலையங்கத்தில் நன்றாக விளக்கியுள்ளீர்கள்.

நீடூர். அ. முஹம்மது நிஜாமுத்தீன்.

* தலைமைக்குத் தயாராகும் இந்திய ராணுவப் பயிற்சி வீரர்கள் பற்றிய கவர் ஸ்டோரியின் செய்திகள் மெய்சிலிர்க்க வைத்தன; பெருமையாகவும் இருந்தது.

கொணவட்டம்.
கே. ஆர். தேவேந்திரன்.

* இத்தனை கட்டுக்கோப்பும், கடமை உணர்ச்சியும், தன்னலமற்ற சேவையுள்ளமும் கொண்ட ராணுவ வீரரை மணக்க, எந்தப் பெண்ணுக்குத்தான் கசக்கும்! கட்டுரை பரேடைப் போலவே கச்சிதமாய் இருந்தது.

சென்னை — 33. வி. எஸ். வாசன்.

* "மேனகா காப்பாற்றினார்" போன்ற நகைச்சுவைக் கதையின் மூலம் எங்களை விலா நோகச் சிரிக்க வைத்து விட்டார் வின்சென்ட்!

மொரப்பூர். ச. உமர்கான்.

* யார் அதிகமாகச் சிரிக்க வைத்துச் சிங்கப்பூர் செல்கிறார்களோ, இல்லையோ! வாராவாரம் ஜோக் மற்றும் துணுக்குகளைப் படித்துச் சிரித்துச் சிரித்து ஏற்படும் வயிற்று வலிக்காக நான் டாக்டரிடம் போய்க் கொண்டிருக்கிறேன்.

சேலம் — 1. ரவி பாலாஜி.

* வீட்டில் ஒருவரையொருவர் விட்டுக் கொடுத்து வாழ்ந்தால், சிறிய வீடும் சொர்க்கமாகும் என்பதைச் சுருங்கக் கூறினாலும், தெளிவாகக் கூறி விட்டது 'கூட்டுக் குருவிகள்' சிறுகதை.

மாணம்புச்சாவடி. இரா. ஆதி நாராயணன்.

* 'எத்தனை மண்டல் கமிஷன்கள் வந்தாலும், கமிஷன் இல்லாமல் வேலை கிடைக்காது!' — என்ற புதுக்கவிதை வரிகளைச் 'சத்திய சோதனை' சிறுகதை தெளிவாக்கி விட்டது!

தஞ்சாவூர்.
மா. அதிராமவிஜயன்.

* 'கல்லூரித் தேர்தல்கள் குறித்து க. சிவராஜன் என்ற மாணவர் 'வகுப்பு பிரதிநிதிகள்' மூலம் மாணவர் தலைவர் தேர்ந்தெடுக்கப்படலாம் என்று கருத்துத் தெரிவித்திருந்தார். எங்கள் ஏ. வி. சி. கல்லூரியில் முதல்வரின் அறிவுரைப்படி இம்முறை, மூன்றாண்டுகளுக்கு முன்பே தொடங்கப்பட்டு நன்முறையில் செயல்பட்டு வருகிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவிடைமருதூர்.
எஸ். நாதன் பாபு.




* கல்லூரிப் பேரவைத் தேர்தல்கள் எப்படி நடக்க வேண்டும், என்று மாணவர்கள் வழங்கிய யோசனைகள் அனைத்தும் அருமை. "தேர்தலில் நிற்கும் மாணவன் அரியர்ஸ் ஏதும் வைத்திருக்கக் கூடாது" என்று ஒரு மாணவர் யோசனை வழங்கியிருந்தார். சென்ற ஆண்டு தஞ்சைக் கல்லூரியில் இந்த யோசனை அமுலுக்கு வந்தபோது, அனைத்து மாணவர்களும் 'ஸ்ட்ரைக்' செய்தனர். ஏனென்றால், தேர்தலில் நிற்க விரும்பிய அனைத்து மாணவர்களுக்கும் அரியர்ஸ் இருந்ததுதான். இதற்கு எங்கே போய் முட்டிக் கொள்வது?

தஞ்சாவூர் — 1. ஆர். ராம்சந்தர்.

* அமெரிக்க முன்னணி எழுத்தாளரான ஆல்வங்கின், சிறப்புப் பேட்டி படு வித்தியாசமாக இருந்தது. தன்னைப் பற்றியும், அமெரிக்க, இந்திய தேசங்களின் உண்மைச் சூழ்நிலைகளைப் பற்றியும் தெளிவான கண்ணோட்டத்துடன் அவர் கூறியிருந்த கருத்துக்கள் அனைத்தும் பொன்னேடுகளில் பொறிக்கப்பட வேண்டியவை.

ஈரோடு — 1. தி. மனோஜ்குமார்.

* உலகின் மிகச் சிறந்த மதம்; அதுதான் அன்பு மதம் — பாபாவின் இவ் வார்த்தைகளைச் சிந்தித்து பார்த்தால்... இன்று, பஞ்சாப், காஷ்மீர், இலங்கை, ஈரான், ஈராக் பிரச்னைகளுக்கு இடமே இல்லை. ஜெர்மன் மக்கள் பாபாவின் வார்த்தைகளை உணர்ந்ததாலோ என்னவோ, இரு நாடுகளையும் ஒரே நாடாக மாற்றி விட்டார்கள். நாமும் இதனை உணர்ந்தால் பிரிவினைவாதங்களுக்கு இடமே இருக்காது.

வேலூர். பொ. பொற்செல்வன்.

* முந்திரிக் கொட்டையில் 'ஓடு உடைப்பது' என்று விவசாயிகள் குறிப்பிடுவது முந்திரிப் பழத்திலிருந்து பருப்பை அகற்றுவதைத்தான் என்ற கருத்து தவறானது. முந்திரிப் பழம் வேறு; கொட்டை வேறு. முந்திரிக் கொட்டையின் ஓட்டைக் குத்தி உடைத்துத்தான் பருப்பை எடுக்க முடியும். கருத்து ஒன்றுதான். சொற்கள்தான் இடம் மாறி விட்டன.

ஊத்தங்கரை. பி. கோவிந்தசாமி.




வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மாபெரும் தலைவரின் — அதுவும் இருபத்தேழு ஆண்டுகள் தனிமைச் சிறைவாசம் அனுபவித்த ஒரு போராட்ட வீரரின் வாழ்க்கையைத் திரைப்படமாக்குவது கத்திமேல் நடக்கும் சமாசாரம்.

அதில் வழக்கமான சினிமாத்தனம் துளியும் தலைநீட்டி விடுவது கூடாது. அதே நேரத்தில் ஒரு டாக்குமெண்டரி என்கிற உணர்வை ஏற்படுத்தி விடுவதும் கூடாது. அந்த வித்தையை வெற்றிகரமாகச் செய்துள்ளது, கறுப்பு இனத்தலைவர் நெல்சன் மண்டேலாவின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் இந்தப் படம். (தயாரிப்பு: டிக்கி பாம்பர். டைரக்ஷன்: பிலிப் ஸாவில்லி)

எடுத்த எடுப்பிலேயே' ஒரு காட்சி.

ஒரு பரந்த வெளியில் அமைந்துள்ள, பெரும்பாலும்தகடுகளால்ஆன தாற்காலிகக் குடியிருப்புகள். அதில் வாழ்க்கை நடத்தும் கறுப்பு இன மக்கள். திடுமென ஜீப்புகளில் வரும் வெள்ளைப் போலீசார் குடியிருக்கும் அனைவரையும் அடித்து நொறுக்கி ஆடு மாடுகளைப் போல் பஸ்களில் அடைத்துக் கொண்டு செல்ல, புல்டோசர்கள் அந்தக் குடியிருப்புகளைத் துவம்சம் செய்து தரை மட்டமாக்குகின்றன...

அந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து மண்டேலா அறிமுகம். (நடிப்பவர்: டானி க்ளோவர்)

வந்து நிற்கும் ரயிலிலிருந்து இறங்கி நடக்கிறார் மண்டேலா. அருகாமையில் அமைந்திருக்கும் ஒரு குடியிருப்புப் பகுதியின் எல்லா வீட்டுக் கதவுகளையும் ஒவ்வொன்றாகத் தட்டுகிறார். விரைவில் ஒரு பெரும் மக்கள் கூட்டம் அவர் எதிரில்...

"இன ஒதுக்கல் ஒரு தெய்வீகச் சட்டம்" என்று ஏற்கெனவே ஒரு வெள்ளைப் போலீஸ் அதிகாரி வெளியிட்டிருந்த கருத்துக்கு மறுப்புக் கூறி அந்த மக்களுக்கு அழைப்பு விடுக்கிறார்:

"உயிரை இழக்கத் தயாராக உள்ளவர்கள் என்னுடன் வாருங்கள். வந்து, பலாத்காரம் உங்களை நோக்கி வருவதை எதிர்பார்த்துக் காத்திருங்கள். ஆனால், நீங்கள் மட்டும் சாத்வீகத்தைக் கைவிட்டு விடாதீர்கள். நாம் அனைவரும் ஒரே நாட்டவர். நாம் ஒன்று சேர்ந்து தென்னாப்பிரிக்காவை விடுவிக்க வேண்டும்..."

அதன்பின் — ஒரு நெடிய போராட்டம், தனிமைச் சிறைவாசம், அங்கங்கே அள்ளித் தெளித்தாற்போல மனத்தைத் தொடும் நிகழ்ச்சிகள்...

நீதிமன்றக் கூண்டில் நிற்கிறார் மண்டேலா. தம்முடைய கொள்கைகளையும் லட்சியங்களையும் போராட்ட வழிமுறைகளையும் எடுத்துக் கூறுகிறார். முடிவில் அவருக்கு ஆயுள் தண்டனை. அவருடைய அந்த நீதிமன்றப் பேச்சு காந்தி மகாத்மாவை நினைவுபடுத்துகிறது.

மண்டேலா ராபென் தீவில் அமைந்துள்ள தனிமைச் சிறையில் அடைக்கப்பட்டபின் அவருடைய மனைவி வின்னி மண்டேலா (நடிப்பவர்:, ஆல்ஃப்ரெ வுட்வர்ட்) வீட்டுக்குள் அடங்கிக் கிடந்து விடவில்லை. மாறாக, கணவரின் பெயரும் கொள்கைகளும் எங்கும் பரவி நிலைத்து நீடிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்கிறார். விளைவு? அவருக்குப் பதினாலு மாதத் தனிமைச் சிறைவாசம். புத்தியைப் பேதலிக்கச் செய்துவிடக் கூடிய சூழ்நிலை. அதன் பாதிப்பிலிருந்து தப்பிக்க இருவருமே ஒருவருக்கொருவர் மானசிகமாகக் கடிதங்கள் எழுதிக் கொள்வதும் அவற்றில் தங்களுடைய அமரத்துவமான காதலைப் பரிமாறிக்கொள்வதும் மனத்தைத் தொடும் உணர்ச்சிமயமான காட்சிகள்.

எல்லாவற்றுக்கும் உச்சமான ஒரு நிகழ்ச்சி. —

உலக நாடுகள் மத்தியிலிருந்து தென்னாப்பிரிக்க இனவெறி அரசுக்கெதிரான கண்டனங்கள். பலமுனைகளிலிருந்தும்மண்டேலா விடுவிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை. அதிபர் போத்தா அசைந்து கொடுக்கிறார். மண்டேலா போராட்டப் பாதையைக் கைவிட்டு ஒதுங்கி வாழ்வதாக உறுதியளித்தால் அவரை விடுவிப்பதாக அறிவிக்கிறார். அதைத் தொடர்ந்து, மண்டேலாவின் மீது மதிப்பும், மரியாதையும் அனுதாபமும் கொண்டுள்ள சிறை வார்டரான வெள்ளையர் ஒருவர், இந்த வாய்ப்பை அவர் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறார்., அதற்கு மண்டேலாவின் உறுதியான பதில்:

"என் மக்களுக்கு என்று விடுதலையோ, அன்றுதான் எனக்கும் விடுதலை."

படம் முழுதுமே, "சத்தியம், நேர்மை, அர்ப்பணிப்பு உணர்வு... இவைதான் ஒரு தலைவனின் லட்சணங்கள்" என்கிற இலக்கணம் பளிச்சிடுகிறது.

ஒரே ஒரு குறை — தொலைக்காட்சி நிலையத்தினர் இதனை நள்ளிரவுப் படமாக ஒளிபரப்பியதுதான். முடியும் போது மணி 1.30. எத்தனை பேர் பார்க்கத் தவறியிருப்பார்களோ!

— பிச்சாமி



* ராதாவும் ராதாகிருஷ்ணனும்.

[redacted]  [redacted]

இந்திய கலாச்சாரத்தின் ஒரு பிரதிநிதியாகவே ராதா கிருஷ்ணனைப் பார்க்கத் தொடங்குகிறார் மேரி!

ஒரே வாரத்தில் மேரியின் மனத்தில் இமாலய மாற்றம்! "ஐ லவ் யூ கிருஷ்ணா! ஐ வாண்ட் டு மேரீ யூ! ஐ வாண்ட் டு லிவ் வித் யூ ஃபார் எவர்.

இதைக் கேட்டு ஆச்சர்யத்தில் வெல வெலத்து — ஆனந்தத்தில் திக்குமுக்காடுகிறார் ராதா கிருஷ்ணன்.

சில வாரங்களுக்குப் பின் ஒரு நல்ல நாளில் பரமக்குடியிலிருந்து 'மைக்' கூப்பிடு தூரத்திலுள்ள எமனேஸ்வரத்தில் — ராதா கிருஷ்ணன் சொந்த மண்ணில், ஊரார் முன்னிலையில் ராதாவாக மாறிய மேரியின் கழுத்தில் தாலி ஏற்றுகிறார்.

எளிமையாய் — இனிமையாய் வாழ்ந்து

# கிருஷ்ணனைப் பிரிந்த ராதை

'ராதா கிருஷ்ணன் — ராதா!' யாரென்று தெரிகிறதா?

தொழு நோயாளி ராதா கிருஷ்ணன் — பிரான்ஸ் தேசத்து இளமங்கை ஆனிமேரி என்ற ராதா!

இன்னும் தெரியாதவர்களுக்கு மட்டும். ஒரு சின்ன ஃப்ளாஷ் பேக்!

ராமேஸ்வரம்; 79ம் ஆண்டு பிப்ரவரி 24—ஆம் நாள்.

தொழுநோயின் கொடூரப் பிடியிலும், தளராத மனத்தோடு கைடாக வேலை பார்த்துக் கொண்டிருந்த ராதா கிருஷ்ணன், பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஆனிமேரி, அவர் பாய் ஃபிரண்ட் பிரான்சிஸ் இருவரையும் பார்க்கிறார். அவர்களிடம் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு, இருவரையும் ஒவ்வோர் இடமாக அழைத்துச் சென்று காட்டுகிறார்!

இந்திய கலாச்சாரத்தைப் பற்றி — இந்து மதத் தத்துவத்தைப் பற்றி — தமக்குத் தெரிந்த அளவில் அரை குறை ஆங்கிலத்தில் மேரிக்கு ராதா கிருஷ்ணன் சொல்லச் சொல்ல —

வந்த இவர்களின் இலட்சிய வாழ்வில் திடீரென்று ஒரு புயல்!

விளைவு? 17.9.89 அன்று ராதாவைக் காணவில்லை!

இருவரும் பிரிந்து ஓராண்டாகி விட்ட நிலையில், ராதா கிருஷ்ணனை அவரது இல்லத்தில் சென்று சந்தித்தோம்.

"உயர்தரக் காதலால் இணைந்ததாகக் கூறிக் கொண்ட உங்களுக்குள் அப்படி என்ன பூசல்?"

"கணவன் — மனைவின்னு இருந்தா அவர்களுக்கிடையே சின்னச் சின்ன கருத்து வேறுபாடுகள் இருக்கத்தானே செய்யும்! எங்க இருவருக்குமிடையே இருந்த சாதாரண விவகாரத்தை 1986ல் நானும் ராதாவும் மகாபலிபுரம் போயிருந்த போது, எங்களுக்கு நண்பராகக் கிடைத்த ஜோஸ் ஆனந்த் என்ற இளைஞர் தனக்குச் சாதகமாப் பயன்படுத்தி, என்டயிருந்து ராதாவைப் பிரிச்சிட்டாரு..."

"அப்படி என்ன கருத்து வேறுபாடு?"

"கொஞ்ச நாளா ராதாவின் நடவடிக்கை

களில் சில மாற்றங்கள் தெரிஞ்சது. எந்தக் கலாச்சாரத்தின் மீது மோகம் கொண்டு, என்னைக் கல்யாணம் பண்ணிக்கத் துணிந்து வந்தாளோ, அதே கலாச்சாரத்தை நாளடைவில் அலட்சியப்படுத்த ஆரம்பித்தாள்...''

''உதாரணத்துக்கு ஒன்று சொல்லுங்களேன்.''

''எங்க பையன் இங்க படுத்திருப்பான். அவள் வெளியே செல்லும் போது, பையனைத் தாண்டிப் போவாள். 'படுத்திருக்கும் யாரையும் தாண்டிப் போகக் கூடாது' என்று நான் சொன்னதை அவள் கண்டு கொள்ளவேயில்லை.''

''அது உங்கள் சொந்த மகன் இல்லை போலிருக்கே...?''

''என் தங்கையோட மகன். எங்களுக்குக் குழந்தை இல்லை என்பதற்காகத் தத்து எடுத்திருக்கோம்.''

''இதற்கு ராதாவின் சம்மதம் இருந்ததா?''

''ஓ... தாராளமா! என்னை விட அவன் மீது அவளுக்குத்தான் பாசம் அதிகம்! என்னோட அம்மாகிட்டக் கூட கேசவனைக் கொடுப்பதற்கு அவள் சம்மதிக்க மாட்டாள். எப்போதும் அவளே தான் அவனைத் தூக்கி வைத்துக் கொஞ்சிக் கொண்டிருப்பாள்.''

''இந்த நிலையில் ஜோஸ் ஆனந்த், ராதாவின் மனத்தை எப்படி மாற்றியதாகச் சொல்கிறீர்கள்?''

''86ல் அவரைச் சந்திச்சோம். அதுக்குப் பிறகு அடிக்கடி கடிதம் எழுதுவாரு. இங்க மூணு தடவை வந்திருக்காரு.''

''கடிதம் உங்கள் பேருக்கு வருமா? உங்கள் மனைவி பேருக்கா?''

''ராதாவுக்குத்தான் போடுவாரு.''

''அந்தக் கடிதத்தை நீங்கள் படிப்பீர்களா?''

''இங்கிலீஸ்லதான் எழுதுவாரு! இங்கிலீஸ்ல நான் நல்லாப் பேசுவேன்... ஆனா படிக்கத் தெரியாதுங்க.''

''லெட்டர்ல என்ன எழுதியிருக்கார்னு ராதாட்ட நீங்க கேட்க மாட்டீங்களா?''

''மாட்டேன்!''

''அப்படிக் கேட்கணும்னு உங்களுக்குத் தோணலியா?''

''இல்லீங்க! ராதா மேல எனக்குக் கடுகளவும் சந்தேகம் வந்ததில்லீங்க!''

ராதாவின் நடவடிக்கைகளில் மாற்றம் வந்ததென்று... சொன்னீர்களே...?''

''ஆமாம், ஆனந்தின் அறிமுகம் கிடைத்த பிறகு அடிக்கடி நான் ஆத்திரப்படும்படி நடந்து கொண்டாள்.''

''அப்படி என்ன செய்வார்?''

''நான் என்ன சொன்னாலும் அதற்கு நேர் எதிராகச் செய்யத் துணிய ஆரம்பித்தாள். கேட்டால், 'நான் அப்படித்தான் செய்வேன்,' என்று அடம்பிடிப்பாள்! இந்த மாதிரி நேரங்களில் சில தடவை அவளை நான் அடித்தும் இருக்கிறேன்.''

''மாறுபட்ட கலாச்சாரத்தில் பிறந்து, உங்களைத் தஞ்சம் என்று வந்த ஒரு பெண்ணை, மனோதத்துவ ரீதியில் மென்மையாய்த் திருத்துவதற்கு முயற்சி செய்யாமல் அடித்திருக்கிறீர்களே, இது நியாயமா?''

''அடிப்படையில் நான் மகா கோபக்காரன்! ஆனால் அவள் விஷயத்தில் எவ்வளவோ அமைதியாய் என்னைக் கட்டுப்படுத்தியிருக்கிறேன். சில நேரங்களில் என் எல்லை மீறும் போது தான் அடித்திருக்கிறேன். அப்போது கூட, என் அம்மா ஓடி வந்து தடுத்து என்னை ஏசி, மருமகளைச் சமாதானப்படுத்துவாள்.''

''திடீரென்று ராதா காணாமல் போனது எப்படி?''

''நான் சில நாட்கள் கலையரங்கத்தில் போய்ப் படுப்பேன். அன்னிக்கும் அப்படித்தான் ராத்திரி வீட்டுல படுக்கல. மறுநாள் காலை வழக்கம் போல் எழுந்திருச்சி வீட்டுக்கு வந்தேன். ராதாவைக் காணவில்லை.''

''இங்கேயிருந்து எதையாவது எடுத்துக் கொண்டு போயிருக்கிறாரா?''

''ஆமா! ஒரு பெரிய சைஸ் டேப் ரிகார்டர், ஒரு காமிரா, ஐயாயிரம் ரொக்கம், நாலு மோதிரம், இரண்டு வட கோதுமைச் செயின், எல்லாத்தையும் எடுத்துட்டுத்தான், ராவோடு ராவாப் போயிருந்தா...''

''அப்புறம் என்ன செய்தீர்கள்?''

''திருவண்ணாமலையில அலெக்குன்னு ஒரு சாமியார் இருக்காரு. அவருக்கும் ஆனந்துக்கும் நெருங்கிய பழக்கம். அங்க தான் ராதாவைக் கூட்டிட்டுப் போயிருக்கணும்னு முடிவு பண்ணி என் நண்பர் ஒருவரோடு திருவண்ணாமலைக்குப் போனேன்!''

''அப்புறம்?''

• வளர்ப்புக் குழந்தையுடன் ராதாகிருஷ்ணன்.





**"காலையில பத்து மணிக்குள்ள எங்க ஆபீசுக்குப் போயிடணும். இல்லாட்டி வெளிக் கதவைப் பூட்டிடுவாங்க!"**

**"அவ்வளவு ஸ்ட்ரிக்டா?"**

**"லேட்டா வர்றவங்களால உள்ளே இருக்கிறவங்களோட தூக்கம் பாதிக்கப் படுதாம்..."**

**— என். நாகராஜன்**

"அலெக் வீட்டுல, அவள், ஆனந்த், அலெக் மூணு பேரும் போதையில புகை விட்டுக்கிட்டு இருந்தாங்க... அதைப் பார்த்தும் என்னால சும்மா இருக்க முடியல. என்கிட்ட இருந்த வரை மனுஷியா வாழ்ந்தே.. இப்போ மிருகமா மாறிட்டியே பாவின்னு சத்தம் போட்டுக் கத்தினேன்! அவ சிரிச்சுக்கிட்டே, டைவர்ஸ் டாகுமெண்ட்ஸ்ல கையெழுத்துப் போட்டுட்டு இடத்தைக் காலி பண்ணுன்னு சொன்னா... நான் முடியாதுன்னு மறுத்தேன். உடனே அலெக் போலீஸ் ஸ்டேஷனில் தனக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்தி, கஞ்சா கடத்தல் கேஸ்ல, வேலூர் ஜெயில்ல என்னைத் தள்ள வச்சிட்டாரு."

"அப்புறம்?"

"ஒரு வாரம் ஜெயில்ல இருந்தேன்! என் உள்ளூர் நண்பர் வந்து என்னை ஜாமீனில் எடுத்து வெளியே கொண்டு வந்தாரு."

"அப்புறம்?"

"நானும் ராதாவும் பரமக்குடி ஸ்டேட் பாங்கில் ஜாயிண்ட் அக்கௌண்டில் டெபாசிட் பண்ணியிருக்கிற 15,000 ரூபாய் தனக்குத்தான் சேர வேண்டும் என்று வக்கீல் நோட்டீஸ் விட்டாள்! நானும் பதிலுக்கு விட்டேன்! இப்போது அந்த வழக்கு, பரமக்குடி சிவில் கோர்ட்டில் நடந்து கொண்டிருக்கிறது!"

"விவாகரத்து வாங்காத வரை, ராதா உங்கள் மனைவிதானே? ஆபத்தில் சிக்கியிருக்கும் அவரை மீட்பதற்காக நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?"

"அவள் பெற்றோருக்கு உண்மை நிலவரத்தை எடுத்துச் சொல்லித் தபால் எழுதியிருக்கிறேன்..."

"ராதா, மீண்டும் உங்களிடம் வந்தால் ஏற்றுக் கொள்வீர்களா?"

"அவள் திருந்தி வந்தால், ஏற்பேன். அதை நிரூபிக்க அவள் முதலில் என் அம்மாவின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்க வேண்டும். ஓடிப் போனவளைச் சேர்த்துக் கொண்டதற்காக எனக்கு இந்த ஊரில் வாழ முடியாத எதிர்ப்பு வந்தாலும் வேறு எங்கே யாவது போய் வாழவும் நான் தயார்!" என்று உணர்ச்சிவசப்பட்டுச் சொல்கிறார் ராதா கிருஷ்ணன்.

**ராதாகிருஷ்ணன் தரப்பில் இப்படி. ராதாவின் தரப்பில் எப்படி? ராதா தங்கியிருப்பதாகச் சொல்லப்பட்ட ரமணாசிரமத்திற்குச் சென்ற போது...**

**தி**ருவண்ணாமலை ரமணாசிரமத்தில், அறை எண் K—16ல் ஆனி மேரி எனப்படும் ராதாவைக் காணச் சென்ற போது, அங்கே அவர் இருக்கவில்லை. அவரைத் தேடி ராதா கிருஷ்ணன் அங்கே சில மாதங்கள் முன்பு வந்ததாகவும், அவர் மீது குற்றச்சாட்டுக்கள் கூறி, பிரச்னையை விவாதித்ததாகவும், ராதா அவருடன் செல்ல மறுத்து விட்டதாகவும், ஆசிரமத்தின் மேலாளர் மணி தெரிவித்தார்.

"உங்களுக்கு மேலும் விவரம் தேவை என்றால் திருவண்ணாமலை டவுன் போலீஸ் ஸ்டேஷனில் விசாரியுங்கள்! ஏனென்றால் இந்த விவகாரம் போலீஸ் வரை சென்றதும், அந்தப் பெண்மணியை ஆசிரமத்தை விட்டு வெளியேறி விடுமாறு கேட்டுக் கொண்டோம். ஆசிரமத்தின் அமைதியும், பெயரும் கெடுவதை நாங்கள் விரும்பவில்லை!" என்றார் மணி. ஆசிரமத்தில் இருந்த போது அமைதியாகவே ராதா இருந்தாராம்.

**ச**ட்டம் — ஒழுங்குப் பிரிவு தலைமைக் காவலர் தாண்டவராயன் நடந்த சம்பவத்தை நினைவு கூர்ந்து சொன்னார். பரமக்குடியிலிருந்து ராதா கிருஷ்ணன் ராதாவைத் தேடி வந்ததும், தம்முடன் மறுபடி வந்து இருக்குமாறு வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதும் உண்மைதான் என்றார்.

"காமிரா, டேப் ரிகார்டர், ஐயாயிரம் ரூபாய், இரண்டு வடம் சங்கிலி இவற்றை எல்லாம் ராதா தம்மிடமிருந்து எடுத்துப் போய் விட்டதாக ராதா கிருஷ்ணன் கூறியிருக்கிறார். அவை உண்மைதானா? நீங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு அவரை அழைத்து வந்த போது இந்தக் குற்றச்சாட்டைக் கூறியிருக்கிறாரா?"

"வாருங்கள். கிரைம் இன்ஸ்பெக்டர் துரைசாமியிடம் கூட்டிப் போகிறேன். அவர் சொல்லுவார்!" என்றார் தாண்டவராயன்.

இட ஒதுக்கீடு எதிர்ப்புப் போராட்டங்களின் விளைவாக டில்லியில் ஸ்கூட்டர், கார்களை அலங்கரிக்கும் இரு புதிய ஸ்டிக்கர்கள்:

* Don't blame me;
  I didn't vote VP!
* I'm ashamed
  I have voted VP!

தகவல்: எம். சாந்தி.



கிரைம் இன்ஸ்பெக்டர் குற்றப் பதிவுப் புத்தகங்களை எடுத்து வந்து செப்டம்பர் 89லிருந்து ஒரு நாள் பதிவைக் கூட விடாமல் நம் எதிரிலேயே அலசிப் புரட்டிப் பார்த்து விட்டு, ''அப்படி அவர் குற்றம் சுமத்தியிருந்தால் இதில் பதிவு செய்திருப்போம். இதில் எதுவுமில்லை!'' என்றார்.

புறப்படுமுன் தாண்டவராயன் ஒரு தகவல் சொன்னார்:

''இங்கே அந்தச் சமயத்தில் உதவி சூபரின்டென்டென்டாக இருந்தவர் மிதிலேஷ் குமார் ஜா. அவர் இப்போது தாம்பரத்தில் இருக்கிறார். அவர் ஒருவேளை உங்களுக்குச் சரியான தகவல்கள் தரக் கூடும்.''

சேலையூர் மகாலட்சுமி நகரில், ஏ.எஸ்.பி.யின் அலுவலகத்தில், மிதிலேஷ் குமார் ஜாவைச் சந்தித்தோம். அவர் சொன்னார்:

''நீங்கள் குறிப்பிடும் அலெக் ஒரு சாமியார் அல்ல. ஊர் ஊராக எந்தக் குறிக்கோளும் இல்லாமல் சுற்றி அலையும் Wanderer. உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்தவர். அவர் ஒரு ஸ்விஸ் பெண்மணியை மணந்து கொண்டு, அப்போது திருவண்ணாமலையில் இருந்து வந்தார். (ஜோஸ் ஆனந்த் இவர்களுக்கு நண்பர் ஆகியிருக்கிறார்.) இந்த ஸ்விஸ் பெண்மணி சிறிது காலம் ஆனிமேரிக்கு ஆதரவு அளித்து வந்திருக்கிறார் என்று அறிந்து கொண்டேன்.

''பிரெஞ்சுப் பெண்மணியான ஆனிமேரி, அவருடைய நாட்டில் போதைப் பொருளுக்கு அடிமையாகி, பிறகு அமைதியை நாடி இந்தியாவுக்கு வந்தவர். அவர் நாட்டில், அவரது சமூகம் அவரை ஒதுக்கி வைத்திருந்திருக்கலாம். ஆனிமேரியின் பெற்றோர் மாதா மாதம் அவருக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தார்கள். அது, அவர்களுடைய அரசு இவர் போன்றவர்களுக்குக் கொடுக்கும் உதவித் தொகையாகவும் இருக்கலாம்.

''அவர் இங்கே வரும் போது பிரமை பிடித்தவர் போல்தான் இருந்தார். ஒரு வசியத்துக்கு உட்பட்டவர் போல் (ஹிப்நாடிக் ஸ்பெல்) இருந்தார். பேச்செல்லாம் கூடத் தெளிவாக இருக்கவில்லை. தயக்கமும் தடுமாற்றமுமாகத்தான் இருந்தது. ஒரு மாதிரி 'டெஸ்பரேட்'டாக இருந்தார். ராதா கிருஷ்ணன் அவரைத் துரத்திக் கொண்டு அங்கே வந்து விட்டது அதிர்ச்சியாகத்தான் இருந்தது அவருக்கு. அவருடன் பரமக்குடிக்குச் செல்ல சுத்தமாக அவர் விரும்பவில்லை.

''ஸ்டேட் பாங்க்கில் போட்டு வைத்திருந்த பதினைந்தாயிரம் ரூபாய் விஷயமாக, மறுபடி அந்தப் பெண் என் உதவியை நாடிய போது, பரமக்குடியில் நேரில் போய் இருவருக்கும் சரி பாதித் தொகை கிடைக்கும்படி, சமாதானமாகப் போகும்படி அறிவுரை கூறினேன். அவர் அங்கே போனார் என்றும் அறிகிறேன்.

''ராதா கிருஷ்ணனைப் பொறுத்தவரை, ஓரளவுக்குச் சரளமாக ஆங்கிலம் பேசத் தெரிந்தவர். தொழு நோயாளியாக இருந்தாலும் அவரிடம் இருந்த ஏதோ ஒரு வசிய சக்தியும், பேச்சுத் திறமையும், அமைதியை நாடி இந்தியா வந்த ஆனிமேரிக்கு இதமாக இருந்திருக்க வேண்டும். அவரைத் திருமணம் செய்து கொள்ள அவையே காரணமாகவும் இருந்திருக்கக்கூடும். ஆனால் அதன்பின் அவர் அனுபவித்த துன்பங்கள் அவரை அங்கிருந்து ஓட வைத்திருக்கின்றன. உண்மையிலேயே ஆனிமேரி அவரை நேசிக்கும் பட்சத்தில் அவருடன் திரும்பச் சென்றிருக்கலாம். அப்படித் தோன்றவில்லை. கஞ்சா தொடர்பாக ராதா கிருஷ்ணன் கைது செய்யப்பட்டது உண்மைதான். ஆனால் அது அலெக் என்பவரின் செல்வாக்கால் அல்ல.

''ராதா கிருஷ்ணனின் பிடியிலிருந்து அப்போதைக்கு ராதாவை நான் காப்பாற்றியதோடு சரி. அப்புறம் அவர் என்ன ஆனார் என்று தெரியவில்லை. வடக்கே எங்கேனும் அவர் போயிருக்கலாம்.''

— சாருகேசி

வாசகர் யோசனையும், ராதாகிருஷ்ணன் பேட்டியும்: **நெல்லை குரலோன்**

போட்டிக் கதை — 6

# பசி வென்றது!

வெளிச்சம் பட்டதும் கண்கள் கூசின!

ஆயிரம் வாட் பல்பு ஒன்று தன் ஒளியைக் கண்களுக்குள் மொத்தமாக உமிழ்ந்து விட்டதோர் உணர்வு. வெம்மை கண்டு ஓட்டுக்குள் சுருங்கும் நத்தையின் நிலையில் விழிகள் திறந்த மாத்திரத்திலேயே மூடிக் கொண்டன. அப்படியும் சுடுமணலைக் கண்களுக்குள் யாரோ கொட்டி, நரநரவென அழுந்தத் தேய்க்கிற வேதனை. மூடியும் மூடாமலும் இருந்த இரு கண்களையும் கைகளால் பொத்திக் கொண்டு புழுவாய்த் துடித்தான் மாதவன்.

நேற்று முன்தினம் செய்த 'வெல்டிங்' வேலையின் பாதிப்பு...!

''அப்பாவிற்கும், புள்ளைக்கும் எது இருக்கோ இல்லையோ வெட்டி ரோஷத்துல மட்டும் குறைச்சலேயில்லை...! 'வேலையத்துக் கிடக்கறியே புருசா'ன்னு பேசினதும் ரோஷத்துல போன உன் அப்பன் வேலையைச் சம்பாதிச்சாரோ இல்லியோ நோவைச் சம்பாதிச்சுட்டு வந்து படுத்திட்டார்... உன் ரோஷமும் இன்னைக்கு எது வரைக்கும் போவும்ன்னு நானும் பார்க்கத் தானே போறேன்... போ... போ... காடு காடாத் திரிஞ்சாலும் வீடு கண்டு நுழைஞ்சு தானாகணும் போ...!''

— வாசலிலிருந்து உச்சஸ்தாயியில் கத்தும் கனகாவின் உரத்த குரல், ஊரையே தூக்கும் வண்ணம் வாசலில் ஆரம்பித்து வீதி வரை ஓடின தன் மகனின் அழுகுரல்...

''ச்சே... இந்த வீட்ல ஒரு நிமிஷம் நிம்மதியாப் படுக்க முடியாதே...!'' என்ற முணுமுணுப்புடன் கோபமாய் எழுந்து உட்கார்ந்தவன், ''ஏய் கனகா...!'' என்று கைகளைக் கண்களுக்கு அரணாக்கி அடித் தொண்டையில் இரைந்தான்.

அப்போதுதான் வெளியிலிருந்து வீட்டுக்குள் அடியெடுத்து வைத்துக் கொண்டிருந்த அவள் இவனையே திரும்பி முறைத்தாள்.

''என்ன ஐயாவுது குரல் அதிகாரமாக் கேக்கறாப்புல இருக்கு...? ம்... ரெண்டு நாளா வேலைக்குப் போய் விடு கொள்ளாத அளவு சம்பாதிச்சுப் போட்ட வேகமா...?''

ஏற்கெனவே உடலால் எரிந்து கொண்டிருந்த மனசு, இப்போது மனைவியின் குத்தல் வார்த்தைகளால் தகிக்க ஆரம்பித்தது. இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டு, ''பையனை அடிச்சியா...?'' — பல்லைக் கடித்துக் கொண்டு கேட்டான்.

''ஓஹோ... பையனை அடிச்சதும் பாசம் பிச்சுக்குதோ...? உங்க புள்ளைக்கு பழைய சோறு தொண்டைக் குழியில இறங்க மாட்டேங்குதாம்... புதுச் சோறுதான் வேணுமாம். வாங்கித் தர்றீங்களா...?''

தலையை ஒரு நொடி நொடித்தபடி கேட்ட அவளின் குரலில், வார்த்தைகளில் ஏற்கெனவே பழுக்கக் காய்ச்சின இரும்பெனத் தகித்த அவனது விழிகள் மேலும் சிவந்தன.

''அதுக்குப் போய் பையனை அடிச்சியா...?''

''பிடிச்சதே பிடிவாதம்ன்னு அடம் பிடிச்சா அடிக்காம முத்தமிடுவாங்களாக்கும். உங்களை அப்படித்தான் வளர்த்திருங்களாக்கும். அதுதான் இப்படி 'அசமந்தமா' இருக்கீங்களோ...?''

அவ்வளவுதான்...

மாதவன் கோபத்தில் எழுந்தே விட்டான்!

''எதுக்குப் பாரு குதர்க்கமா வாயடி பேசறே... தரித்திரம்... உன்னை...!'' — கண்ணுக்குள் இம்சித்த தீக்கங்குகள் மொத்தமும் மனசுக்குள் குடிபெயர்ந்து விட்ட நிலையில், ஆத்திரத்துடன் அவளை நோக்கிக் கை நீட்ட...

''அடிங்க... நல்லா அடிங்க...! புருஷனா இலட்சணமா புள்ளைகளுக்கும் பெண்டாட்டிக்கும் அஞ்சு காசு சம்பாதிச்சுப் போட வக்கில்லாட்டாலும் அதிகாரத்துலயும் அடி உதையிலும் ஒண்ணும் குறைச்சலேயில்லை. அஞ்சு ரூபா கொடுத்தாலும் அஞ்சு நாளைக்குக் கஞ்சியோ, கூழோ காய்ச்சி வைக்கறேன்ல... எனக்கிருக்கோ இல்லியோ, வயித்தைக் கட்டி வாயைக் கட்டி புருஷனும் புள்ளையும் பசியில துடிச்சிடுவாங்களேன்னு பழையதுன்னாலும் வச்சிருந்து கொடுக்கறேன்ல. ஏன் என்னை அடிக்க மாட்டீங்க...? தரித்திரமாம் தரித்திரம்.. புரியாத புள்ளைதான் நெஞ்சுல உதைக்கிறான்னா, எல்லாம் தெரிஞ்ச புருஷனோ இடுப்பையே முறிக்கறேன்கறான்...! எல்லாம் என் தலையெழுத்து...''

கா. சு. வேலாயுதன்

மனைவியின் புலம்பல் ஆரம்பமானது...

''பொழுது விடிஞ்சு பொழுது போனா உனக்கு இதே பாட்டாப் போச்சு... பசி... பசி... பசி! இதைத் தவிர வேற எதுவுமே தெரியாதே உனக்கு...! தரித்திரம், உனக்குப் பணம்தானே வேணும். எவன் எக்கேடு கெட்டா என்ன? கண் போனா என்ன... பணம்வேணும்...! எப்படியோ பாடு பட்டுக் கொட்டறேன்!''

அதற்கு மேலும் மனைவியின் சுடு சொற்களைக் கிரகிக்க முடியாது எழுந்தவன், வாயில்வந்தவார்த்தைகளை அள்ளி வீசியபடி சட்டையை மாட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான். கோபமாய்..ரோஷமாய்... வேலைக்கு!



சூரிய கிரணங்கள் பட்டதும் கண்களில் கடகடவெனக் கண்ணீர் ததும்பியது...!

வெல்டிங் அவஸ்தையினால் மட்டுமல்ல...!

மனசுக்குள் அழுந்தின வேதனைகளின் காரணமாகவும்தான்.

இல்லறத்தின் அன்றாடப் பிரச்னைகளை எதிர்கொள்ள முடியாத இயலாமையினால்... இல்லாமையினால்... ஒரு மனைவிக்கும், குழந்தைகளுக்கும் உணவுத் தேவையைக் கூடப் பூர்த்தி செய்ய முடியாத தன் கையாலாகாத்தனத்தினால்...

பத்து வருட சர்வீஸை, பத்து மாத 'சர்வீஸ் கட்' காட்டி, இருந்த வேலையையும் கபளீகரம் செய்து விட்ட ஃபாக்டரி. நயவஞ்சகனாய் ஃபாக்டரி அதிபர். வேலைக்குப் போய்த் திரும்பின பக்கமெல்லாம், தான் பழகாத வேலை; பார்த்திராத வேலை. பார்த்துப் பழகியும் உடலுக்கு ஒத்துவராத வேலைகள். எல்லாமே ஒரு வினாடி நிழற்படமாய்... எரிகிற கண்ணுக்குள் எண்ணெயாய்...!

பழகாத வேலைக்குப் பத்து ரூபாய் என்றால் பார்த்திராத வேலைக்கு எட்டு ரூபாய் எனும் சம்பள ரீதியில் இயங்கும் சிறு தொழிற்சாலைகள். சிறு தொழில்கள் என்ற போர்வையில் நிரந்தரமில்லாத் தொழிலாளிகளைக் கொண்டு நிறைந்த லாபம் கொழிக்கும் முதலாளிகள்... இரத்தம் உறிஞ்சும் அட்டையென உழைப்பாளிகள் உப்பு வியர்வையை உறிஞ்சிக் குடிக்கும் குருரக்காரர்களின் பிடிக்குள் சிக்குண்டு

'தவிக்கும் அடிமட்டத் தொழிலாளர்கள்...

திரும்பின பக்கமெல்லாம் இதே கதை... இதே காட்சி...!

இவனைக் கண்டதும் 'தாம் — தூம்' என்று வானுக்கும் பூமிக்குமாகக் குதித்தார் அந்த ஒர்க்ஷாப் முதலாளி.

''இது என்ன மடம்னு நினைச்சிங்களாய்யா...? அவனவன் இஷ்டப்படி வேலைக்கு வர்றதுக்கும் போவதற்கும்... ம்...? உன்னையெல்லாம் நம்பிப் பொறுப்பான ஒரு வேலையை ஒப்படைச்சேன் பாரு... முதல்ல என்னைச் 'சோட்டால' அடிக்கணும்ய்யா...!''

— அவர் போட்ட சப்தத்தில் 'மெஷின் ஷாப்'பில் வேலை செய்து கொண்டிருந்த தொழிலாளிகள் கூட 'மெஷின் சப்தங்களை'யும் மறந்து ஆங்காங்கே எட்டிப் பார்த்தனர்.

''இல்லே சார்... அது வந்து... மூந்தா நாள் செஞ்ச 'கவர் — வெல்டிங் வேலை கண்ணுக்குச் சேரலை சார்... ஒரே கண் எரிச்சல்... அதுதான் ரெண்டு நாளா வேலைக்கு வர முடியலை...!''

— மாதவன் தயக்கத்துடன் குரலை உள்ளிழுக்க.

''அதுதான் உன் 'முகரக் கட்டை'யே பதில் சொல்லுதேய்யா. உன்னோட வெல்டிங் இலட்சணத்தை...! நீங்க எல்லாம் ஏன்யா வெல்டர்னு சொல்லிக்கிட்டு வந்து எங்களோட உயிரை எடுக்கறீங்க...? இல்லே. தெரியாமத்தான் கேட்கறேன்... முதல்லேயே இது உன் உடம்புக்கு ஒத்து வராத வேலைன்னு சொல்லியிருந்தா வேறு ஆளை யாவது 'அப்பாயிண்ட்' பண்ணியிருப்பேன்ல. இப்ப முதல் தவணையா ஒரு பார்ட்டிக்கு அனுப்ப வேண்டிய ஆர்டர் குறிச்ச நேரத்துல அனுப்பாததால இந்த வருஷ ஆர்டரே 'கேன்ஸல்' ஆயிடுச்சு. தெரியுமாய்யா உனக்கு...?''

தன் இஷ்டத்துக்குப் பேசினவர், திடீரென இடையில் நிறுத்தி விட்டு அவனைப் பார்வையாலேயே தகித்தார். அவரின் பார்வையைச் சந்திக்கத் திராணியற்றுத் தலைகுனிந்த மாதவனின் கண்களில் நீர் முட்டியது.

வெல்டிங் அவஸ்தை.

மனைவியின் குத்தல் வார்த்தைகளின் இம்சையை வேரறுக்கும் விதமாய் எதிரொலித்த ஒர்க்ஷாப் முதலாளியின் குரல் மனசுக்குள் கசையடியாய், புண்ணைக் கீறின இரத்த விளாறியாய்.. கண்களுக்குள் நீராக...!

''உன்னைச் சொல்லி என்னய்யா புண்ணியம்? எல்லாம் என்னோட நேரம்... வேலை ரொம்ப அவசரம்னு அதிக சம்பளம் பேசி ஊர், பேர் தெரியாத உன்னை — உன் பேச்சை நம்பி வேலைக்கு அமர்த்தினேன் பாரு. என்னைச் சொல்லணும். எனக்கு இதுவும் வேணும். இன்னமும் வேணும்...!''

— தன்னைத்தானே நொந்து கொண்டவர் எழுந்தார்.

''இனிமே என்கிட்ட உனக்கு வேலை கிடையாது. பேசாம உன்னோட சம்பளத்தை வாங்கிட்டு நடையைக் கட்டு. கேஷியர்... இவனுக்கு ஒரு நாளுக்கு பன்னிரண்டு ரூபாய் சம்பளம் கணக்குப் பண்ணி, வேலை செஞ்ச ரெண்டு நாள் கூலியைக் கொடுத்தனுப்பு...!''

மாதவனுக்கு இதைக் கேட்டதும் மனத்துள் பகீரென்றது...

'வேலை இல்லை' என்று முகத்திலடித்தாற்போல் துரத்தியடிக்கும் முன்பே, பேசினபடி சம்பளமும் கிடைக்காது பறிபோகும் நிலை கண்டு குமுறியது.

''என்ன சார் இது...? நாற்பது ரூபா சம்பளம் பேசிட்டு, பன்னிரெண்டு ரூபாயை...! நான் என்ன பிச்சைக்காரன்னு நினைச்சீங்களா...?'' — எங்கோ போகத் திரும்பின முதலாளி, இவனின் உணர்ச்சி மிகுந்த குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். அவரின் பார்வையில் அலட்சியம். 'அற்பப் புழுவே உன்னால் என்னை என்ன செய்து விட முடியும்...?' என்ற ஏளனம்.

''என்னய்யா நாற்பது ரூபா வேணுமா...? ஓ... நீ செஞ்ச வேலைக்கு நாற்பது என்ன




## பெண் போலீஸ் செய்த டிரிக்!

தஞ்சை விஜயா தியேட்டரில் 'வைஜெயந்தி ஐ. பி. எஸ்' படம் பார்க்கச் சென்றிருந்தேன். பெண்கள் பகுதியில் எக்கச்சக்கக் கூட்டம். எல்லோரும் முண்டியடித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கே வந்த இரண்டு பெண் போலீஸார், எல்லோரையும் அதட்டி வரிசையாக நிற்கச் சொல்லி விட்டு, அவர்கள் மட்டும் வரிசையைக் கடந்து, கவுண்டர் அருகே சென்று இரண்டு டிக்கெட்டுகள் வாங்கிக் கொண்டு வெளியேறி விட்டார்கள்!

— மா. அதிராமவிஜயன்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு,
எஸ். செல்வ கணேசன்

WRITE PIN CODE IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை
PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்:**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-17.**

## சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!

ஜோடியாகச் சிங்கப்பூர் சென்று வர ஒரு வாய்ப்பு! பால்பாயிண்ட் பேனாவை எடுத்துக் கீழுள்ள வெற்றிடத்தில் குபீரென்று சிரிக்க வைக்கும் ஒரு ஜோக்கையோ அல்லது ஓர் அனுபவத் துணுக்கையோ எழுதிக் கூப்பனைக் கத்திரித்து அனுப்புங்கள். அடுத்த ஆகஸ்ட் வரை நடக்கும் இப்போட்டியில் யாருடைய ஜோக் அல்லது துணுக்கு மிக அதிகமாகப் பிரசுரமாகிறதோ, அவருக்கே ஜோடியாகச் சிங்கப்பூர் சென்று வந்து பேட்டி தரும் வாய்ப்பு! முடிவு தேதி: 5.11.90. உறை மீது "சிரிப்பு — சிங்கப்பூர் — 5.11.90" என்று குறிப்பிட்டு அனுப்புங்கள்.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: ........................

விலாசம்: ........................

........................

........................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**



நானூறு ரூபாய் கூடக் கொடுக்கலாம் போ! ஆமா அது சரி உன்னால எனக்குக் 'கேன்ஸல்' ஆன ரெண்டு இலட்சம் ரூபா ஆர்டரை யார் வாங்கித் தருவா? நீ வாங்கித் தர்றியா?"

நமுட்டுச் சிரிப்புச் சிரித்தபடி கிண்டல் ததும்பக் கேட்டவர் மூக்குக் கண்ணாடியைக் கழற்றிச் சட்டையில் துடைத்தார்.

"சார் அது உங்க சொந்த விஷயம்... ஆர்டர் கேன்ஸல் ஆகறதும் ஆகாததும் உங்களோட தொழில் அணுகுமுறைக்கும், திறமைக்கும் உட்பட்ட விஷயம். ஆனா இண்டர்வியூ அப்ப நான் செஞ்சு காட்டின சுத்தமான வேலையையும், திறமையையும் மதிச்சுத்தான் நாற்பது ரூபாய் சம்பளமே நிர்ணயிச்சீங்க... அதை முதல்ல ஞாபகம் வச்சுட்டுப் பேசுங்க...!"

குரலில் தொனித்த காரம் அந்த முதலாளியை என்னவோ செய்திருக்க வேண்டும். ஒரு நிமிஷம் கண்கள் சிவக்க அவனையே பார்த்தார்.

"என்னடா, தொழில் திறமையைப் பத்தி எனக்கே அட்வைஸ் பண்றியா? வெல்டிங்ன்னா என்னன்னு தெரியுமாடா முதல்ல உனக்கு? ஒரு குழந்தைப் பையனை விட்டாக் கூட ரெண்டு மணி நேரத்துல உன்னை விடவே நல்லா வெல்டிங் அடிப்பான்! இந்த வேலை பழகறது அவ்வளவு சுலபம். ஆனா அந்த வேலைக்கு உகந்த மாதிரி உடம்பைப் பழக்கிக்கணும். அது தெரியுமா உனக்கு?".

ஏக வசனத்தில் குரலை உயர்த்திப் பேசின முதலாளியின் முகத்தில் சாமர்த்தியமாகப் பேசி விட்ட திருப்தி. மாதவனுக்கோ உடலெல்லாம் பதறியது. ஏதேதோ கேட்க வேண்டும் என்று உதடுகள் துடித்தன. கூடவே ஏதாவது ஏடாகூடமாய்க் கேட்டு விடுவோமோ என்ற பயமும் இருந்தது...

சிறிது நேரம் அவனையே பார்த்துக் கொண்டிருந்த முதலாளி —

"ஏதோ பையனைப் பார்த்தா பரிதாபமா இருக்கேன்னு 'ஏதோ கொஞ்சம்' கொடுத்தா ரொம்பத்தான் உச்சிக்குப் போறியே... நியாயப்படி வேறொருத்தனா இருந்தா நீ செஞ்ச வேலைக்கு நஷ்டத்தைச் சரிக்கட்டிட்டு வேலையைப் பாருன்னுடுவான்.. தெரியுமா...? புத்தி சாலித்தனமா இடைக்கறது இலாபம்ன்னு கொடுக்கறதை வாங்கிட்டுப் போறதுன்னாப் போ... இஷ்டமில்லேன்னா உடனே நடையைக் கட்டு...!"

— அலட்சியமாய்ச் சொல்லி விட்டு வேறெங்கோ நடந்தார்.

"ஒரு முகக் கவசம் கூடத் தராம உடைஞ்சு போன ஒரு கறுப்புக் கண்ணாடியை வச்சுட்டு என்ன பேச்சுப் பேசுறான். படுபாவி. மட்டமான வெல்டிங் ராடை வாங்

கிக் கொடுத்து விட்டு உடம்பைப் பழக்கிக் கணுமாம்...! இவனையெல்லாம் நிக்க வச்சுச் சுடணும்...!' — மனம் கொதிக்க, உதடுகள் துடிதுடிக்கத் தூரத்தில் போகும் முதலாளியையே வெறித்துப் பார்த்தான்.

அவர் இவனைச் சட்டை செய்யாது சென்று கொண்டேயிருந்தார்.

கேஷியர் கொண்டு வந்து நீட்டின சொற்பப் பணத்தை ஒரு கணம் "ஏதோ பார்க்கக் கூடாததைப் பார்த்து விட்டது போல் பார்த்து விட்டு, கம்பெனியை விட்டு விடுவிடுவென வெளியே நடந்தான்.

மனசுக்குள் பந்து பந்தாகச் சுழலும் வேதனைகள்...

'இரண்டு குழந்தைகளுடன் காலத்தை எப்படி ஓட்டுவது...?' என்று தன் முன் நிற்கும் வாழ்க்கை; முதுகு வளைத்து நிற்கும் கேள்விக்குறியாய்... புரியாத புதிராய்...

கண்களில் நின்ற வெல்டிங் எரிச்சல், மனசுக்குள் மனிதாபிமானமற்று மனித ஜந்துக்கள் கிறி விட்ட ரண வேதனை, எல்லா வேதனைகளையும் மிஞ்சும் விதமாய்— திக்கனலாய், எரிமலையாய் வயிற்றுக்குள்...!

பசி...! அகோரப் பசி...!

சுண்டிப் போயிருந்த வயிற்றை இரு கைகளாலும் இறுக்கிப் பிடித்தபடி குறுகிப் போய் நடு வழியில் அமர்ந்து விட்டான் மாதவன்.

பார்வை மங்கியது... தலை இறுகிறுத்தது...

எதிரே வருவோர் போவோர் எல்லாம் நிழலுருவமாய், மங்கலாய்... இவன் நிலை உணரும் மனிதாபிமானிகளாய் ஏனோ விநோதமாய்ப் பார்த்தபடி விலகி விலகியே சென்றனர்.

'அப்பனுக்கும் புள்ளைக்கும் வெட்டி ரோஷத்துலே ஒண்ணும் குறைச்சலே யில்லை...!' — குண்டூசியாய்க் குத்தும் மனைவி கனகாவின் வசனமும், கிழிந்து தொங்கின ட்ரவுசர் இடுப்பில் நிற்காமல் ஒரு கையால் அதைப் பற்றியபடி தெருவில் 'ஒரு சாண்' வயிற்றுக்காக ஓலமிட்டபடி ஓடும் ஐந்து 'வயது மகனின் பால் வடியும் முகமும் நிமிஷ நேரத்தில் அவன் முன் வந்து போயின. 'நான் படும் இந்தக் கண நேர அவஸ்தைதானே அவளும் தினம், தினம் பட்டிருக்க வேண்டும்...? குழந்தைகளும் பாடாய்ப் பட்டிருக்க வேண்டும்...?'

இவனுக்கு ஏதோ புரியாத ஒன்று புரிந்தது போலிருந்தது. 'அந்த முதலாளி கொடுத்த 'சொற்பப் பணத்தையாவது வாங்கி வந்திருக்கலாமே... ஏதோ இன்றைய பொழுதிற்குப் போதுமே...' என்று மனம் எண்ணியது.

'இப்போதுதான் என்ன கெட்டுப் போய் விட்டது...? போய்க் கேட்டால் கூலிப் பணத்தைக் கொடுக்கவா மாட்டார்கள்...?''

'...'கூடாது... புலி பசிச்சாலும் புல்லைத் தின்னக் கூடாது...' மனத்துள் மார்தட்டிக் கொண்டு எழுந்தான். அவனுடன் கூடவே அவனுக்கே இயல்பான ரோஷத்தை உள்ளடக்கின தன்மான உணர்வும் கிளர்ந்தெழுந்தது.

அவனுள் தன்மான உணர்விற்கும் வயிற்றுப் பசிக்கும் ஒரு ஜீவ மரணப் போரே நிகழ்ந்தது. உள்ளத்துக்கும் உடலுக்குமான போராட்டம்.

தடுமாற்றத்துடன் எழுந்தவன் தூரத்தில் புள்ளியாகத் தெரிந்த ஒர்க் ஷாப்பைப் பரிதாபமாகப் பார்த்தான்.

பசி வென்றது!

உள்ளம் தள்ளாட, கால்கள் தவழ்ந்தன. ஒர்க் ஷாப்பை நோக்கி...

---

# அரசுக்கு வேறு வழியே இல்லையா?



டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி பாளையங்கோட்டையில் 'போதை ஒழிப்பு' பற்றிப் பேசிய போது கேட்டது:

''மதுவினால் வரும் ரூ. 200 கோடி அரசுக்குக் கிடைக்க, மக்கள் ரூ. 2500 கோடிக்குக் குடிக்க வேண்டும்! அரசு ஊழியர்களுக்கு ரூ. 400 கோடிக்கு மேல் ஊதிய உயர்வு கொடுத்த அரசுக்கு, இந்த ரூ. 200 கோடி பெற வேறு மார்க்கமில்லையா?''

— எஸ். சுந்தரராஜ்.

# வீட்டு ஓனர் மகன்

**ரம்யப்ரபா**

**க**ருணாகரன் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். பங்கஜம் சமையலறையிலிருந்து வாசல்புறத்துக்கு வந்தாள்.

''என்னங்க ஒரு முக்கியமான விஷயம்...!''

''ம்... என்ன ...?'' என்றார் செய்தித் தாளிலிருந்து பார்வையை எடுக்காமலேயே.

''இப்படிச் சாய்ச்சிக்கிட்டுப் பேப்பர் படிச்சிட்டாப் போதுமா ... கொஞ்சமாவது குடும்பப் பொறுப்பு வேணாம்...?''

''நீ என்ன சொல்றே...?''

''உடனே நாம வேறு வீடு பார்த்துக் குடி போயிடணும்...!''

''ஏன் இந்த வீட்டுக்கு என்ன வந்தது ...?''

''ஒண்ணும் வரலை... நம்ம பொண்ணு ரேகாவையே சுத்திச் சுத்தி வாரான். வீட்டு ஓனரோட மவன் கோபாலன்...''

''என்ன சொல்றே...?''

''ஆமாங்க... தினம் ஏதாவது சாக்கு வச்சிக்கிட்டு நம்ம வீட்டுக்கு வரான்ங்க... எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலைங்க...''

**ப**ங்கஜம் சொன்ன பிறகுதான் கருணாகரன் கவனிக்க ஆரம்பித்தார். பங்கஜம் சொன்னது போலவே ஏதாவது சாக்கு வைத்துக் கொண்டு வருகிறான்! அன்றும் அப்படித்தான்.

''சார்... சார்...!'' குரல் கேட்டு இவர் போவதற்குள் ரேகா, ''என்ன வேணும்...?'' எனக் கேட்டுக் கொண்டே விரைந்தாள்.

''போன மாதம் இருபதாம் தேதி பேப்பர் வேணும்...''

அதற்குள் அங்கு வந்த கருணாகரன், ''பேப்பரெல்லாம் கடைக்காரனிடம் போட்டாச்சிப்பா...!'' என முகத்திலடித்தது போலச் சொல்லி அனுப்பினார்.

அடுத்த நாள் கிணற்றடியில் ரேகா துணி துவைக்கும்போது முகம் கழுவுவதற்கு அங்கு வந்தான். இவருக்கு எரிச்சலான எரிச்சல்.

''ரேகா...!'' எனக் கூப்பிட்டார்.

''என்னப்பா...?''

''இங்கே வந்திட்டுப் போம்மா...!''

''என்னப்பா...'' எனக் கேட்டுக் கொண்டே வந்தாள்.

''வீட்டுக்காரங்களோட வேலையெல்லாம் முடிஞ்சிடட்டும்மா; நீ அப்புறமாத் துணி துவைக்கலாம்...''

''இல்லேப்பா... இப்ப கிணற்றடியிலே நமக்குத்தாப்பா வேலை...!'' எனச் சொல்லி விட்டு மீண்டும் துணி துவைக்கச் சென்றாள்.

**ம**றுநாள் மாலை அலுவலகம் விட்டு வந்த போது கவனித்தார்.

வீட்டு வாசலில் ஏதோ கேட்டுக் கொண்டிருந்தான் ரேகாவிடம்...

''இதோ அப்பாவே வந்திட்டாங்க... அவங்களைக் கேட்டாத் தெரியும்'' என்றாள்.

''என்னம்மா...?''

''எல். ஐ. சி. யிலே உங்களுக்குத் தெரிஞ்சவங்க யாராவது இருக்காங்களா? இவருக்கு இண்டர்வியூ வந்திருக்காம்.''

''யாரையும் எனக்குத் தெரியாதுப்பா...'' என்று பேச்சை முடித்து அனுப்பினார்.

''பாவம்பா...! படிச்சிட்டு வேலைக்காக ரொம்பக் கஷ்டப்படுறாருப்பா.''

''யாருக்குத்தான் வேலை உடனே கிடைச்சிடுது?''

''இவரு எல்லாத்துலேயும் ஃபர்ஸ்ட் கிளாஸில் பாஸ் பண்ணியிருக்காருப்பா...''

''அவன் கதை நமக்கெதுக்கு? விடும்மா...'' எனச் சொல்லிக் கொண்டு உள்ளே சென்றார்.

''பார்த்தீங்களா... நடக்கிற கூத்தை!'' என்றாள் பங்கஜம்.

''என்ன பண்றது பங்கஜம்... நம்ம பெண்ணை எல்லோரிடமும் சகஜமாப் பழக அனுமதிச்சிட்டோம். இப்ப ஏதாவது சொன்னா அவ மனசு கஷ்டப்படுமேன்னு பார்க்கிறேன்.''

''அவ அவனை லவ் பண்றேன்னு சொல்லப் போறா; அப்போ லபோ திபோன்னு அடிச்சிக்கப் போறோம்...''

''சரி... சரி வீண் கற்பனையெல்லாம்



பண்ணிக்க வேணாம்...''

''நீங்க வீடு மாத்துற எண்ணத்துலேயே இல்லையா...?''

''ஏன் இல்லாம? தெரிஞ்சவங்ககிட்டே யெல்லாம் சொல்லி வச்சிருக்கேன். போற இடம் பிரச்னை இல்லாம இருக்கணும்ல...''

''அது சரி; அதுக்காக நாட்களை வளத் தாம சீக்கிரம் வேறு வீடு பாருங்க...''

''எப்படியும் இந்த மாசத்துக்குள்ளே நாம வேறு வீட்டுக்குப் போயிடலாம் பங்கஜம்...''

''அப்பத்தான் நாம நிம்மதியா வாழ லாம். பொம்பளைப் பிள்ளையை வச்சுக் கிட்டு எவ்வளவு கஷ்டப்பட வேண்டியி ருக்கு!''

**க**ருணகரன் தமக்குத் தெரிந்தவர்க ளிடமெல்லாம் சொன்னார், ''நல்ல வீடா வேணும். முக்கியமா இள வயசுப் பையங்க தொந்தரவு இல்லாத வீடா இருந்தா நல் லது...'' என்று.

அவர் தேடியது கிடைத்தது. பக்கத்துத் தெருவிலேயே ஓர் அழகான வீடு கிடைத் தது.

வீட்டு ஓனர் பக்கத்து வீட்டிலேயே குடி யிருக்கிறார். மிலிட்டரியிலிருந்து வந்தவர். அதே கண்டிப்பு நிறைந்தவர்.

கருணாகரன் வீட்டைப் போய்ப் பார்த் தார். அவருக்கு வீடு ரொம்பப் பிடித்துப் போயிற்று.

தம் கூட வந்த நண்பரிடம் கேட்டார். ''வீடு பிடிச்சிருக்கு. வீட்டுக்காரருக்குப் பையன்க உண்டா?''

''இல்லாம என்ன, ரெண்டு பையங்க காலேஜில் படிக்கிறாங்க!''

''ஐயையோ... எனக்கு அழகான மக இருக்காளேப்பா...''

''என்ன கருணாகரன் சார்! பிழைக்கத் தெரியாத ஆளா இருக்கீங்களே. அவங்க வங்க என்னடான்னா தம் பொண்ணு யாரை யாவது காதலிச்சு அதுவே கல்யாணம் பண்ணிக்காதான்னு நினைக்கிறாங்க... நீங்க என்னடான்னா...''

''அதுக்கில்லே... தப்புத் தண்டா நடந்த பிறகு வருத்தப்படறதை விட, முன்பே எச்சரிக்கையாக இருப்பது நல்லதில் லையா...''

''உண்மைதான். ஆனா நீங்க இங்கே கொஞ்சம் கூட பயப்பட வேண்டாம். வீட்டுக்கார ராம சுப்பிரமணியம் ரொம்பக் கண்டிப்பு. அவரைப் பாத்து அவரோட பையன்க நடு நடுங்குவாங்க... அதனால உங்க பொண்ணுக்கு எந்தவிதமான கெடுத லும் வராது...''

''நீங்க சொல்றது எனக்குக் கொஞ்சம் ஆறுதலா இருக்கு. அப்ப இப்பவே வாடகை, அட்வான்ஸ் இதெல்லாம் விசாரிச்சுக் குடுத்திட்டுப் போயிடலாம்...''

**ரா**ம சுப்பிரமணியம் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தார்.

''சார்...!'' என அழைத்தார்கள்.

''வாங்க... வீடு பிடிச்சிருக்கா...?''

''ரொம்பப் பிடிச்சிப் போச்சுங்க... வாடகை, அட்வான்ஸ் சொன்னா குடுத் திட்டுப் போயிடலாம்னு இருக்கோம்.''

''எனக்கு வீட்டை வாடகைக்கு விட்டுத் தான் பிழைக்கணும்னு கிடையாது. அதனால அதிக வாடகை கேட்கிறதில்லே. வாடகை இரு நூறும் அட்வான்ஸ் ஐந்நூறும் கொடுங்க.. நீங்க எத்தனை பேர்?''

''நான், என் வொய்ஃப், டாட்டர்...''

''உங்க பொண்ணுக்கு என்ன வயசு...?''

''பதினெட்டாவுது சார்...!''

சிறிது நேரம் யோசித்தார்.

''சார் தப்பா நினைச்சுக்காதீங்க; நான் உங்களுக்கு வீடு தர்றதா இல்லே. என்னோட பையன்க ரெண்டு பேரும் நல்லாப் படிச்சுப் பெரிய உத்தியோகத்துக்குப் போகணும்னு ஆசைப்படறேன். இளவயசுத் தடுமாற்றத் தால அவங்க படிப்புக்கு இடைஞ்சலா உங்க பொண்ணு வந்திட்டா... நான் உங்க பொண் ணைத் தப்புச் சொல்லலை... ஆனா என் பையங்க தடுமாறிட்டா...? வேணாம் சார் வேற வீடு பாத்துக்குங்க...''

கருணாகரன் முகத்தில் ஈயாடவில்லை.



• நிழல்கள் ரவி — சரண்யா: நான் பிடிச்ச மாப்பிள்ளை.



• அஞ்சு

# 'அஞ்சு' பெரிய படங்களில் அஞ்சு!

●● தமிழ்ச் சினிமா உலகை ஓர் உலுக்கு உலுக்கும் நோக்கத்தோடு "தளபதி" என்ற பெரிய பட்ஜெட் படம் ஒன்றைத் தயாரிக்கும் பணியில் இறங்கியுள்ளார் ஜீ. வி. ரஜினிகாந்த், மம்முட்டி, நாகார்ஜுனா என்று மூன்று சூப்பர் ஸ்டார்கள் இந்தப் படத்தில் நடிக்கிறார்கள். மணிரத்தினம் டைரக்ஷன் என்பதற்காகவே எல்லோரும் கால்ஷீட் கொடுக்கச் சம்மதித்துள்ளார்கள். ஆனால் கதையில் மூன்று பேருக்கும் சமமான முக்கியத்துவம் கொடுத்து, அவர்களுடைய ரசிகர்களைத் திருப்திப்படுத்துவதுதான் சற்று சிரமமோ என்று யோசிக்கிறார் ஜீ. வி. எப்படியோ ஒரு வருஷம் டைம் எடுத்து இந்தப் படத்தைச் சிறப்பாகத் தயாரித்துத் திரையிடத் திட்டம் போட்டுள்ளனர்.

●● ஒரு பட விழாவில் நடிகை அஞ்சு, டைரக்டர் மகேந்திரனைப் பார்த்தாராம். பார்த்தவுடனே, "உதிரிப் பூக்கள்லெ நடிச்ச சின்னப் பெண்ணா?" என்று ஆச்சரியப்பட்டுப் போனாராம். அது மட்டுமல்ல. "நான் டைரக்ட் செய்யப் போகிற 'என் கானம் என்னோடுதான்' என்ற புதுப் படத்துக்கு நீதான் ஹீரோயின்" என்று பார்த்த அந்த இடத்திலேயே கூறி, பெரிய ஆச்சரியத்தையும் கொடுத்து விட்டாராம்.

டைரக்டர் பாலசந்தரின் பேனரில் அனந்து டைரக்ட் செய்யும் 'சிகரம்' என்ற படம் மற்றும் வஸந்த் டைரக்ட் செய்யும் மற்றொரு படம் உட்பட 'அஞ்சு' பெரிய படங்களில் அஞ்சு நடிக்கிறார்!

●● கே. பாக்யராஜ் 'சொந்தப் படத்தில் தான் ஒர்க் பண்ணுவேன்' என்ற தமது பிடியைத் தளர்த்தியிருக்கிறார். ஏக்நாத்தின் 'பவுனு பவுனுதான்' என்ற படத்தினை டைரக்ட் செய்கிறார். பாக்யராஜ் முன்பு பூஜை போட்ட வெளிப்படங்களான 'காவடிச் சிந்து' 'சார் ஐ லவ் யூ...' போன்ற படங்கள் மாதிரி இதுவும் பூஜையோடு சரி என்று யாரும் நினைத்து விடக் கூடாது என்பதற்காகவே, பூஜை அன்றே ரிலீஸ் தேதியையும் அறிவித்து விட்டார்கள்.

●● டைரக்டர் ராஜசேகரின் மனைவி நடிகை சரண்யா, மீண்டும் நடிக்க வந்துள்ளார்! வீட்டில் பொழுது போகாததால் நடிக்க வந்துள்ளதாகக் கூறும் சரண்யா கிளாமர் ரோல்களில் நடிக்க மாட்டாராம். விஜயகாந்தின் 'கேப்டன் பிரபாகர்' என்ற படத்தில் ஒப்பந்தமாகி ஷூட்டிங் வரை போய்ப் பின்பு விலகிக் கொண்டார். காரணம், மேற்சொன்னது.

தற்போது 'நான் பிடிச்ச மாப்பிள்ளை' என்ற படத்தில் நிழல்கள் ரவிக்கு ஜோடியாக நடிக்கிறார். இந்தப் படத்தை பாக்யராஜிடம் அஸோசியேட்டாகப் பணியாற்றிய சேகர் டைரக்ட் செய்கிறார். இவர் ஏற்கெனவே 'நீங்களும் ஹீரோதான்' என்ற படத்தினை இயக்கியவர். சரண்யாவைத் தொடர்ந்து தமிழில் ஹீரோயினாக நிறுத்துகிறாரா பார்க்கலாம்!

— எஸ். பாலு.

# சிவகாமியின் சபதம்

இருபத்தைந்தாம் அத்தியாயம்

## கடல் தந்த குழந்தை

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் காஞ்சி ராஜ்யத்தின் புராதன ராஜவம்சம் சந்ததியில்லாமல் முடிவடைந்தது.

''மன்னன் இல்லாத மண்டலம் பாழாய்ப்போய் விடுமே! அரசன் இல்லாத நாட்டில் குடிகள் எல்லையற்ற துன்பங்களுக்கு உள்ளாவார்களே!'' என்று தேசத்தின் பெரியோர்கள் ஏங்கினார்கள்.

அப்போது அருளாளரான ஒரு மகான் மக்களைப் பார்த்து, ''கவலை வேண்டாம்; காஞ்சி ராஜ்யத்துக்கு ஒரு மன்னனைக் கடல் கொடுக்கும்! இதை நான் கனவிலே கண்டேன்!'' என்றார்.

அதுமுதல் அந்நாட்டில் கடற்கரையோரத்தில் காவல் போட்டு வைத்திருந்தார்கள்.

ஒருநாள் கடற்கரையோரமாகக் கப்பல் ஒன்று வந்தது. அது எந்த நாட்டுக் கப்பலோ, எங்கிருந்து வந்ததோ தெரியாது.

கரையில் இருந்தவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையிலே திடீரென்று கொடிய புயற்காற்று வீசுகிறது. ஊழிக்காலம் வந்து விட்டதோ என்று தோன்றும்படி கடல் கொந்தளிக்கிறது. கரையோரமாக வந்த கப்பல் அப்படியும் இப்படியுமாக ஆடுகிறது! கப்பலின் கொடி மரங்கள் சின்னாபின்னமாகின்றன!

ஆ! என்ன பயங்கரம்! தயிரைக் கடையும் மத்தைப் போலக் கப்பல் சுழலுகிறதே! சுழன்று சுழன்று, அடடா, அதோ கவிழ்ந்து விட்டதே! புயற்காற்றின் கோரமான ஊளைச் சப்தத்துடன், கப்பலிலுள்ளோர் அழுகுரலும் கலக்கின்றதே!

கப்பல் கவிழ்ந்து கடலுக்குள் முழுகிற்றோ, இல்லையோ, சொல்லி வைத்தாற்போல், காற்றும் நிற்கிறது. அதுவரை கரையிலே நின்று செயலற்றுப் பார்த்துக்கொண்டிருந்தவர்கள் இப்போது பரபரப்பு அடைகிறார்கள். படகுகளும் கட்டுமரங்களும் கடலில் விரைவாகத் தள்ளப்படுகின்றன. கப்பலில் இருந்தவர் யாராவது தெய்வாதீனமாக உயிருடன் கடலில் மிதந்தால், அவர்களைக் காப்பாற்றிக் கரை சேர்ப்பதற்காகப் படகுகளும் கட்டுமரங்களும் விரைந்து செல்லுகின்றன; படகோட்டிகளும் மீன்பிடிக்கும் வலைஞர்களும் பாய்ந்து செல்லுகிறார்கள்.

அத்தனை படகோட்டிகளிலும், வலைஞர்களிலும் அதிர்ஷ்டசாலி ஒருவன் இருக்கிறான். அதிர்ஷ்டம் அவனைத் தேடிக் கொண்டு வருகிறது. ஆனால், அவனுக்கு மட்டும் வந்த அதிர்ஷ்டமல்ல; நாட்டுக்கே வந்த அதிர்ஷ்டம்! நாட்டு மக்கள் செய்த நல்வினையினால் வந்த அதிர்ஷ்டம்!

நீலக் கடலின் அலைமேல் சூரியன் மிதக்கிறானா என்ன? இல்லை, சூரியன் இல்லை; சின்னஞ் சிறு குழந்தை அது! பலகையிலே சேர்த்துப் பீதாம்பரத்தினால் கட்டப்பட்டிருக்கிறது. அக் குழந்தையின் முகத்திலே அவ்வளவு பிரகாசம்! அத்தனை தேஜஸ்!

ஆனால், குழந்தைக்கு உயிர் இருக்கிறதா? ஒருவேளை....? ஆகா! இருக்கிறது; உயிர் இருக்கிறது! புயலுக்குப் பின் அமைதியடைந்த கடலில் இலேசாகக் கிளம்பி விழும் இளம் அலைகளின் நீர்த்துளிகள் குழந்தையின் முகத்தில் விழும்போது, அது 'களுக்' என்று சிரிக்கிறது!

படகோட்டி அடங்காத ஆர்வத்துடன் அந்தப் பலகையின் அருகில் படகைச் செலுத்துகிறான். குழந்தையைத் தாவி எடுத்துக் கட்டை அவிழ்த்து மார்போடு

அமரர் கல்கி

அணைத்து மகிழ்கிறான். அவனுடைய மார்பின் ரோமங்கள் குத்திய காரணத்தினால் குழந்தை அழுகிறது.

படகோட்டி, படகுக்குள்ளே பார்க்கிறான். அங்கே கப்பலிலிருந்து இறக்கும் பண்டங்களைக் கட்டுவதற்காக அவன் அன்று காலையில் கொண்டு வந்து போட்ட தொண்டைக் கொடிகள் கிடக்கின்றன.

அக் கொடிகளை இலைகளோடு ஒன்று சேர்த்துக் குவித்துப் படுக்கையாக அமைக்கிறான். கொடிகளின் நுனியிலிருந்த இளந்தளிர்களைப் பிய்த்து எடுத்து மேலே தூவிப் பரப்புகிறான். அந்த இளந்தளிர்ப் படுக்கையின் மீது குழந்தையைக் கிடத்துகிறான்.

குழந்தை படகோட்டியைப் பார்த்துக் குறுநகை புரிகிறது!

படகு கரையை நோக்கி விரைந்து செல்லுகிறது.

கரையை நெருங்கும்போதே படகோட்டி கூச்சலிட்டுக் குதூகலிப்பதைக் கண்டு, அந்தப் படகில் ஏதோ விசேஷம் இருக்கிறது என்று கரையிலே நின்றவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள்.

படகு கரையோரத்தை அடைகிறது: கரையில் நின்ற ஜனங்கள் திரண்டு வந்து படகைச் சூழ்கிறார்கள்.

தீர்க்க தரிசனம் கூறிய மகானும் வருகிறார். வந்து, குழந்தையைப் பார்க்கிறார்! பார்த்து விட்டு, "நான் கனவிலே கண்ட புதிய காஞ்சி மன்னன் இவன்தான்! இவனுடைய சந்ததியார் காஞ்சி சிம்மாசனத்தில் வீற்றிருந்து ஆயிரம் ஆண்டு அரசாளப் போகின்றனர்" என்று கூறுகிறார். ஜனங்கள் ஆரவாரிக்கிறார்கள்.

திரைகடல் அளித்த தெய்வக் குழந்தைக்கு அப் பெரியவர், 'இளந்திரையன்' என்று பெயர் இடுகிறார். "தொண்டைக் கொடியின் மீது கண் வளர்ந்தபடியால், தொண்டைமான் என்ற பெயரும் இவனுக்குப் பொருந்தும். இவனால் இனிக் காஞ்சி ராஜ்யத்துக்குத் தொண்டை மண்டலம் என்ற பெயர் வழங்கும்" என்னும் தீர்க்கதரிசனமும் அவர் அருள் வாக்கிலிருந்து வெளி வருகிறது.

வடமொழிப் புலவர் ஒருவர், இளந்தளிர்களின் மீது கிடக்கும் குழந்தையைப் பார்த்துவிட்டு, அதற்குப் 'பல்லவராயன்' என்று நாமகரணம் செய்கிறார்.

அதைத் தமிழ்ப் புலவர் ஒருவர் 'போத்தரையன்' என்று பெயர்த்துக் கூறுகிறார்.

கவிஞர்கள் வருகிறார்கள். கடல் தந்த குழந்தையைப்பற்றி அழகான கற்பனைகளுடன் கவிதைகள் புனைகிறார்கள்.

"இந்தத் திரைகடல் ஏன் இப்படி ஆர்ப்பரிக்கிறது, தெரியுமா? 'திரையனை நான் பயந்தேன்' என்ற பெருமிதத்தினாலே தான்!" என்று ஒரு கவிராயர் கூறிய போது, ஆர்கலியானது தன் அலைக்கைகள் ஆயிரத்தையும் கொட்டி ஆரவாரத்துடன் ஆமோதிக்கிறது.

ற்காலத்தில் வந்த தமிழ்ப் புலவர்களுக்குப் பல்லவ குலத்தைக் கடல் தந்ததாகக் கூறி விட்டுவிட மனம் வரவில்லை. "கடல் தந்த குழந்தை உண்மையில் தமிழகத்தின் அநாதியான சோழ வம்சத்துக் குழந்தைதான்! சோழ குலத்து ராஜகுமாரன் ஒருவன், கடற்பிரயாணம் செய்வதற்காகச் சென்று மணிபல்லவம் என்னும் தீவையடைந்து, அந்நாட்டு அரசன் மகள் பீலிவளையைக் காதலித்து மணந்து கொண்டான். அவர்களுக்கு ஒரு குழந்தையும் பிறந்தது. அந்த அரசிளங்குமரன் தன் மனைவியோடும் குழந்தையோடும் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்த போது கப்பலுக்கு விபத்து நேர்ந்தது. விபத்தில் தப்பிப் பிழைத்து வந்த குழந்தைதான் பல்லவ குலத்தைத் தோற்றுவித்த தொண்டைமான் இளந்திரையன்!" என்று கற்பனை செய்து கூறுகிறார்கள்.

வடமொழி புலவர்களோ, "பாண்டவர்களின் குருவாகிய துரோணருடைய புதல்வர் அசுவத்தாமாவின் வழிவந்தவர்கள் பல்லவர்கள்!" என்ற கூறி, அதற்கு ஒரு கதை சிருஷ்டிக்கிறார்கள்.*

ல்லவ குலத்தின் உற்பத்தியைப் பற்றிய மேற்கூறிய வரலாறுகளில் எவ்வளவு வரையில் உண்மை, எவ்வளவு தூரம் கற்பனை என்பதை இந்நாளில் நாம் நிச்சயித்துச் சொல்வதற்கில்லை. அந்நாளில் அந்தக் குலத்தில்

---

* கடைசியாக, சமீப காலத்தில் இந்திய சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்ட ஐரோப்பியப் புலவர்கள், பல்லவர்களைத் தந்த பெருமையைத் தென்னிந்தியாவுக்கோ வட இந்தியாவுக்கோ தருவதற்கு விருப்பமில்லாதவர்களாய், இந்தியாவுக்கு வட மேற்கிலிருந்து வந்த அந்நியர்களாகிய சகர்தான் காஞ்சிபுரத்தைத் தேடி வந்து பல்லவர்கள் ஆனார்கள் என்று எழுதி, அதைப் புத்தகங்களிலும் அச்சுப் போட்டார்கள். நம் பழம் புலவர்களின் கதைகளையெல்லாம் கற்பனையென்று தள்ளிய நம்மவர்களோ, மேற்படி நவீன ஐரோப்பியப் புலவர்களின் வாக்கை வேதவாக்காக ஒப்புக் கொண்டு 'பல்லவர்கள் அந்நியர்களே' என்று சத்தியம் செய்தார்கள். தமிழகத்துக்குப் பலவகையிலும் பெருமை தந்த காஞ்சிப் பல்லவர்களை அந்நியர்கள் என்று சொல்வதைப் போன்ற கட்டுக்கதை உலகச் சரித்திரத்தில் வேறு கிடையாது என்றே சொல்லலாம்.

பிறந்தவர்களுக்குக் கூட அதன் உண்மை நன்றாகத் தெரிந்திருக்கவில்லை.

ஆனால், ஒன்று நிச்சயமாய்த் தெரிந்திருந்தது; அதாவது பல்லவ குலத்தில் தோன்றியவர்களுக்கெல்லாம் கடற் பிரயாணத்தில் ஆசை அபரிமிதமாயிருந்தது. அந்த ஆசை அவர்களுடைய இரத்தத்தோடு ஒன்றிப் போயிருந்தது.

கீழ்த் திசையில் கடல்களுக்கப்பால் இருந்த எத்தனையோ தீப தீபாந்தரங்களில், பல்லவர்களின் ஆதி பூர்வீக ரிஷபக் கொடியும் பிற்காலத்துச் சிங்கக் கொடியும் கம்பீரமாக பறந்தன.

பல்லவர் ஆட்சி நடந்த காலத்தில் தமிழகத்துக்கும் வெளி நாடுகளுக்கும் கடல் வாணிகம் அபரிமிதமாக நடந்து வந்தது. கப்பல்கள் வந்து நிற்பதற்கும், பண்டங்களை இறக்கி ஏற்றிக் கொள்வதற்கும் கீழ்க் கடற்கரையோரமாகப் பல துறைமுகங்கள் ஏற்பட்டிருந்தன. அவற்றுள் முதன்மையானது மாமல்லபுரத்துத் துறைமுகமாகும்.

மாமல்லபுரத்துக்கு வடபுறத்தில் கடலானது பூமிக்குள் புகுந்து தென்திசையை நோக்கி வளைந்து சென்று மாமல்லபுரத்தை ஏறக்குறைய ஒரு தீவாகச் செய்திருந்தது.

இவ்விதம் காஞ்சி நகருக்கு அருகில் ஏற்பட்டிருந்த இயற்கைத் துறைமுகமானது ஏக காலத்தில் நூற்றுக்கணக்கான கப்பல்கள் வந்து நிற்பதற்கும், பண்டங்களை ஏற்றுவதற்கும் இறக்குவதற்கும் வெகு வசதியாக அமைந்திருந்தது.

மகேந்திரர் காலத்துக்கு முன்னால் அத்துறைமுகத் தீவில் பெரும்பாலும் வர்த்தகர்களின் பண்டகசாலைகளும், சுங்க மண்டபங்களும் மட்டுமே இருந்தன. படகோட்டிகளும் மீன் வலைஞருந்தான் அங்கே அதிகமாக வாசம் செய்து வந்தார்கள்.

மகேந்திர பல்லவர் அங்கே பல அரசாங்க அதிகாரிகளையும் சிற்பிகளையும் குடியேற்றினார். அரச குடும்பத்தினர் தங்குவதற்கு அழகிய கடற்கரை அரண்மனையைக் கட்டி வைத்தார். அத்துறைமுகத்தில் சிற்ப வேலை தொடங்குவதற்குக் காரணமாயிருந்த தமது செல்வப் புதல்வரின் பட்டப் பெயரையும் அப்புதிய பட்டினத்துக்கு அளித்தார்.

முதன் முதலில் அத்துறைமுகத்தில் சிற்ப வேலைகள் தொடங்க வேண்டும் என்று தந்தையும் குமாரரும் சேர்ந்து எந்த இடத்தில் தீர்மானித்தார்களோ அதே இடத்தில், சென்ற அத்தியாயங்களில் கூறிய சம்பவங்கள் நடந்த தினத்துக்கு மறுநாள் பிற்பகலில் சக்கரவர்த்தியும் மாமல்லரும் நின்று கொண்டிருந்தார்கள்.

## இருபத்தாறாம் அத்தியாயம்

# கற்கோயில்கள்

கடல்மல்லைத் தீவின் தென் பகுதியில் விஸ்தாரமான வெட்ட வெளிப் பிரதேசத்தில் வரிசையாக ஐந்து சிறு குன்றுகள் நின்றன.

அவற்றில் மூன்று குன்றுகளில் நூற்றுக்கணக்கான சிற்பிகள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு குன்றையும் குடைந்து கோயில் வடிவமாக அமைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கோயிலில் முன் மண்டபத்துத் தூண்கள் வேலையாகிக் கொண்டிருந்தன. இன்னொரு கோயிலில் மேல் விமான வேலை நடந்து கொண்டிருந்தது. மூன்றாவது குன்றை அப்போதுதான் குடைய ஆரம்பித்திருந்தார்கள்.

சிற்பிகளும் பணியாட்களும் தங்குவதற்கான சிறுகொட்டகைகள் நெடுகிலும் காணப்பட்டன.

ஆயனரின் அரணிய வீட்டைச் சுற்றி நாம் பார்த்தது போன்ற நெடிதுயர்ந்த மரங்களோ, அடர்ந்த செடி கொடிகளோ அந்தப் பிரதேசத்தில் காணப்படவில்லை. வடக்கே வெகு தூரம் மணற் பாங்காயிருந்தது. அதற்கப்பால் கடல் அலைகள் வெண்ணுரையுடன் அவ்வப்போது மேலெழும் காட்சி தோன்றியது. தெற்கிலும் மேற்கிலும் சிறுசிறு பாறைகளும் அவற்றை விடக் குட்டையான புதர்களும் வெகு தூரத்துக்குக் காணப்பட்டன.

ஆனால், வடக்கேயும் வடமேற்கேயும் பார்த்தால் முற்றும் மாறான காட்சி தென்பட்டது. வானளாவிய பெரிய கட்டடங்களும் அவற்றின் இடையிடையே நெடிய தென்னை மரங்களும் காட்சியளித்தன. இன்னும் அப்பால் நூற்றுக்கணக்கான கப்பல்களின் பாய்மரத்து உச்சிகளிலே வரிசை வரிசையாக ரிஷபக் கொடிகள் காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன.

சிற்ப வேலை நடந்து கொண்டிருந்த குன்றுகளுக்கு மத்தியில் ஒரு கல்யானை கம்பீரமாக நின்றது. அதன் பின்னால் இன்னும் கம்பீரமாக அலங்கரிக்கப்



பட்ட பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்து யானை நின்றது.

யானை மீது வந்த சக்கரவர்த்தியும் அவருடைய குமாரரும் கீழே இறங்கிக் கல் யானையின் அருகில் நின்றார்கள். அவர்கள் மீது வெயில் படாமல் ஒரு விசாலமான வெண்குடையைப் பணியாட்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

இதே இடத்தில் ஏழு ஆண்டுகளுக்கு முன்னால் மகேந்திர சக்கரவர்த்தியும் அவருடைய குமாரரும் வந்து இதே விதமாக நின்றதுண்டு. ஆனால், அங்கு நின்ற குன்றுகளும் பாறைகளும் அப்போது மொட்டைக் குன்றுகளாகவும், மொட்டைப் பாறைகளாகவும் இருந்தன.

"அப்பா! அந்தப் பாறையின் நிழலைப் பாருங்கள்! அது யானையைப்போல் இல்லையா?" என்றான் பல்லவ குலந் தழைக்க வந்த நரசிம்ம வர்மன்.

அவன் சுட்டிக் காட்டிய நிழலைச் சக்கரவர்த்தி பார்த்தார்.

"ஆஹா!" என்று அவர் வாயிலிருந்து புறப்பட்ட வியப்பொலியில் விவரிக்க முடியாத பல உணர்ச்சிகள் தொனித்தன.

சற்று நேரம் மகேந்திரர் சிந்தனையில் ஆழ்ந்து வெளி உலகப் பிரக்ஞையே இல்லாதவராய் நின்றார். பிறகு நரசிம்மனைத் தழுவிக் கொண்டு, "குழந்தாய்! எப்பேர்ப்பட்ட அதிசயமான உண்மையை நீ கண்டு பிடித்துக் கூறினாய்! நீ கூறிய வார்த்தையின் மகிமை முழுவதும் உனக்கே தெரிந்திராது!" என்றார்.

பன்னிரண்டு பிராயத்துச் சிறுவனான நரசிம்மன் மேலும் உற்சாகத்துடன், "அப்பா! அதோ, அந்தக் குன்றின் நிழலைப் பாருங்கள்! கோயில் மாதிரி இல்லையா?" என்றான்.

"ஆமாம், நரசிம்மா! ஆமாம்! அந்தக் குன்றின் நிழல் கோயில் மாதிரிதான் இருக்கிறது. அதைக் கோயிலாகவே செய்து விடுவோம். இந்த ஐந்து குன்றுகளையும் ஐந்து கோயில்களாக்குவோம். இன்னும் இங்குள்ள சிறு பாறைகளை யானையாகவும் சிங்கமாகவும் நந்தியாகவும் ஆக்குவோம். இந்தத் துறைமுகத்தைச் சொப்பன லோகமாக்குவோம். ஆயிரம் ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு



இந்தத் துறைமுகத்துக்கு வருகிறவர்கள் எல்லாரும் பார்த்துப் பிரமிக்கும்படியாகச் செய்வோம்!'' என்றார்.

சீக்கிரத்திலேயே அந்தப் பிரதேசத்துக்குச் சிற்பிகள் பலர் சிற்றுளிகளுடன் வந்து சேர்ந்தார்கள். குன்றுகளிலும் பாறைகளிலும் வேலை செய்யத் தொடங்கினார்கள். நேற்று வரை அமைதி குடி கொண்டிருந்த இடத்தில் நூற்றுக் கணக்கான சிற்றுளிகளின் சப்தம் 'கல்கல்' என்று கேட்க ஆரம்பித்தது.

புதர்களில் வாழ்ந்திருந்த சிறு முயல்கள் திடீரென்று எழுந்த 'கல்கல்' சப்தத்தைக் கேட்டு வெளியே வந்தன. காதுகளைத் தூக்கிக் கொண்டு ஒரு நிமிஷம் வியப்புடன் கவனித்தன. பின்னர் அந்தஇடத்திலிருந்து ஓட்டம்பிடித்தன.

அன்று தொடங்கிய சிற்பப்பணி இன்றைக்கும் அங்கே தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. சக்கரவர்த்தியும் மாமல்லரும் அன்றைக்கு நின்ற அதே இடத்தில் இப்போது யானையாகவும் சிங்கமாகவும் ரிஷபமாகவும் உருவெடுத்த பாறைகளுக்கு அருகில் நின்று கொண்டிருந்தார்கள்.

"நரசிம்மா! இந்த யுத்தம் இப்போது வந்ததில் எனக்குப் பலவகையில் சந்தோஷந்தான். ஆனால், இந்தக் கற்கோயில்களின் வேலை ஒருவேளை தடைப்பட்டுவிடுமோ, என் காலத்தில் இந்தத் திருப்பணி பூர்த்தியாகாமற் போகுமோ என்று மட்டும் கவலையாக இருக்கிறது. வடக்கே கன்யாகுப்ஜத்தில் ஹர்ஷவர்த்தனர் வருஷந்தோறும் நடத்தும் உற்சவத்தைப் பற்றித் தெரியுமல்லவா நரசிம்மா?"

"தெரியும், அப்பா! சிவபெருமானுக்கும், சூரியநாராயண மூர்த்திக்கும், புத்தர் பெருமானுக்கும் அவர் மூன்று கோயில்கள் எடுத்திருக்கிறார். அந்த மூன்று கோயில்களிலும் வருஷந்தோறும் உற்சவம் நடத்துகிறார்; மூன்று மதத்தைச் சேர்ந்த பிரஜைகளும் வந்து ஒரே சமயத்தில் உற்சவம் கொண்டாடுகிறார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

"மாமல்லா! ஹர்ஷவர்த்தனர் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய சாம்ராஜ்யத்தை ஆளுகிறார். அவருடைய செல்வமோ நம்முடையதைவிட பன்மடங்கு அதிகமானது. அவருடைய புகழ் இன்றைக்கு உலகமெல்லாம் பரவியிருக்கிறது. ஆனால், என்னுடைய உத்தேசம் மட்டும் நிறைவேறுமானால், ஹர்ஷர் மட்டுமல்ல; இந்தப் பாரத வர்ஷத்தில் இதுவரையில் எந்த அரசரும் சக்கரவர்த்தியும் அடையாத கீர்த்தியைப் பல்லவ குலம் அடையும். ஹர்ஷர் நிர்மாணித்திருக்கும் கோயில்கள் செங்கல்லினாலும் மரத்தினாலும் ஆனவை. நூறு வருஷத்தில் அவை சிதைந்து மறைந்து போய்விடும். ஆனால் இந்தக் கற்கோயில்களுக்கு அழிவென்பதே கிடையாதல்லவா....?"

"இக்கோயில்களில் எந்தத் தெய்வங்களை எழுந்தருளச் செய்யப்போகிறீர்கள், அப்பா? சிவபெருமான், பார்வதி தேவி விநாயகர், சுப்பிரமணியம், சண்டிகேசுவரர் ஆகிய பஞ்ச மூர்த்திகளுக்குத்தான் இந்த ஐந்து கோயில்களும் அல்லவா?"

"இல்லை, நரசிம்மா! ஹர்ஷவர்த்தனரைக் காட்டிலும் அதிகமாக ஒரு காரியம் செய்யப்போகிறேன். இந்தத் தமிழகத்தில் பரவியுள்ள நாலு பெரிய சமயங்களுக்கும் நாலு கோயில்களை அர்ப்பணம் செய்யப் போகிறேன். ஒரு கோயிலில் சிவபெருமானும் பார்வதி தேவியும் வீற்றிருப்பார்கள். இரண்டாவது கோயிலில் திருமாலும் திருமகளும் குடிகொள்ளுவார்கள். மூன்றாவது கோயிலைப் புத்தர் பெருமானின் பெரிய விக்கிரகம் அலங்கரிக்கும். நாலாவது கோயிலில் சமண சமயத்தை ஸ்தாபித்த வர்த்தமான மகா வீரர் எழுந்தருளுவார்...!"

"ஹா!" என்று பெருவியப்புடனும் பெருமிதத்துடனும் மாமல்லர் கூறினார்.

"ஆம்; நரசிம்மா! உண்மையில் நான் சமண சமயத்திலிருந்து விலகிச் சைவத்தைத் தழுவியதே நமது ராஜ்யத்தில் இத்தகைய சமய சமரசத்தை நிலை நாட்டுவதற்காகத்தான். சைவ சமயமானது மற்ற சமயங்களையும் சம உயர்வுடன் கருதிப் போற்ற இடந்தருகிறது. மற்றச் சமயங்களோ அவ்விதம் இடங் கொடுப்பதில்லை. இதை முன்னிட்டே சைவத்தை மேற்கொண்டேன். நமது சாம்ராஜ்யத்திலுள்ள நாலு பெரிய சமயங்களுக்கும் சமமான கௌரவம் கொடுத்துப் போற்ற எண்ணினேன். இதையெல்லாம், வெளியிடுவதற்கு என்மேல் புத்தர்களும் சமணர்களும் கொண்டுள்ள கோபம் தணியும் காலத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தேன். அதற்குள்ளே சமண முனிவர்கள் அவசரப்பட்டு எல்லாக் காரியத்தையும் கெடுத்துவிட்டார்கள்...."

"சமண முனிவர்கள் கெடுத்துவிட்டார்களா!...."

"ஆமாம் அவர்களால் வந்ததுதான் இந்த யுத்தம். சமண காஞ்சியிலிருந்து நாற் புறங்களுக்கும் புறப்பட்டுச் சென்ற சமண முனிவர்கள் சும்மா இருந்து விடவில்லை. நம் நெடுநாளைய சிநேகிதர்களைக் கூட நம் விரோதிகளாக்கி விட்டார்கள். இந்தக் கங்கை பாடித் துர்விநீதனுடைய தந்தைக்கு முடிசூட்டியது யார் தெரியுமா? உன்பாட்டனார் சிம்மவிஷ்ணு மகாராஜாதான். அந்தத் துர்விநீதன் இப்போது நமது பரம்பரை விரோதியான சளுக்கமன்னனுடன் சேர்ந்து கொண்டிருக்கிறான். புலிகேசியின் படை வீட்டில்ஜைன மகாகவி ரவிகீர்த்தியும், துர்விநீதனுடைய குரு பூஜ்யபாதரும் இருக்கிறார்களாம், சைனியத்துடன் சேர்ந்து அவர்களும் வந்து கொண்டிருக்கிறார்களாம். உலகப் பற்றற்ற முனிவர்கள். அதிலும் கொல்லாமை விரதங்கொண்ட சமண குருக்கள், போர்க்களத்துக்கு வருவது என்றால், ஆகா! அவர்களுக்கு என்மேல் எவ்வளவு துவேஷம் ஏற்பட்டிருக்க வேண்டும்?"

"அதைப்பற்றி என்ன கவலை! அப்பா? சமண முனிவர்கள், புத்த பிக்ஷுக்கள் எல்லோரும் நம் விரோதிகளுடன் சேரட்டும்.

## அருள்வாக்கு

அயோத்தியிலே கோலாஹலமாகப் பட்டாபிஷேகம் ஆனவுடன், ராமர் பல பேருக்குப் பல பரிசுகள் தரும்போது ஒரு முக்தாஹாரத்தை ஸீதைக்குப் போட்டார். அவள் அதைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு, சுற்றியிருந்த அத்தனை பரிவாரங் களையும் பார்த்துவிட்டு, ராமனையும் அர்த்த புஷ்டியோடு பார்த்தாள். இரண்டு பேரும் பரிபூர்ண ஐகமத்யம் (ஒரே சித்தம்) கொண்ட தம்பதி. அதனால் அவர்கள் மனஸுக்கு மாத்திரம் தெரிகிற மாதிரி ஆஞ்ஜநேயரை அந்தப் பெரிய ஸதஸிலே கொண்டாடுவ தற்கு ஒரு (ப்ளான்) போட்டுக் கொண் டார்கள்.

ஸீதை ராமரைப் பார்த்த பார்வையா லேயே முக்தாஹாரத்தை அந்தப் பரிவாரத்தி லேயே யாருக்குக் கொடுக்கலாம் என்ப தற்கு அவருடைய அபிப்பிராயத்தைக் கேட்டு விட்டாள். உடனே ராமர், "பராக் ரமம், புத்தி, பணிவு எல்லாம் எவனுக்குப் பூர்ணமாக இருக்கிறதோ அவனுக்கே கொடு" என்றார்.

பாராட்டிதழ் ('ஸைடேஷன்') படித்த வுடன், 'அவார்ட்' கொடுக்கிற மாதிரி, பேரைச் சொல்லாமலே ராமர் இப்படிச் சொன்னவுடன் ஸீதை மாலையை ஆஞ்ஜ நேயருக்குக் கொடுத்து விட்டாள்.



பட்டாபிஷேகக் கட்டத்திலே இப்படி ஆஞ்ஜநேயருக்கு இரண்டு பெருமாகச் செய்ததற்கு ஈடு எதுவும் இல்லை.

ஒரு பெரிய மலைக்கு மேலே சந்திரிகை யில் தாவள்யமாயிருக்கும் ஒரு மேகம் படிந் தால் எப்படியிருக்குமோ, அப்படி அந்த முத்து மாலை ஆஞ்ஜநேய ஸ்வாமியின் பெரிய சரீரத்திலே புரண்டது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

திரிநேத்திரதாரியான சிவபெருமான் அருளாலும்: சக்கராயுதத்தை ஏந்திய திரு மாலின் கிருபையினாலும் நாம் வெற்றி கொள்ளுவோம்."

"வெற்றி தோல்வியைப்பற்றி நான் அவ் வளவாகக் கவலைப் படவில்லை. என்னு டைய நோக்கத்துக்கு இடையூறு நேர்ந்து விட்டதே என்றுதான் வருத்தப்படுகிறேன்" என்று சக்கரவர்த்தி கூறியபோது, அவரு டைய குரலில் துயரம் தொனித்தது.

"மாமல்லர் சற்று மௌனமாயிருந்து விட்டு, "ஐந்தாவது கோயிலை எந்தத் தெய் வத்துக்கு அர்ப்பணம் செய்ய எண்ணியிருந் தீர்கள், அப்பா?" என்று கேட்டார்.

"மேலை நாடுகளில் சிலகாலமாகப் புதி தாக ஒரு மதம் ஸ்தாபனமாகியிருக்கிறதாம். அதை ஸ்தாபித்த அவதார புருஷரின் பெயர் ஏசுகிறிஸ்து என்று சொல்கிறார்கள். அந்தப் புதிய மதத்தைப்பற்றிய விவரங்கள் இன்னும் எனக்குத் தெரியவில்லை. தெரிந்த வுடனே அந்தப் புதிய மதத்தின் தெய்வம் எதுவோ அதை அந்த ஐந்தாவது கோயிலில் எழுந்தருளச் செய்ய எண்ணியிருந்தேன். ஆனால், அதெல்லாம் பகற்கனவாகப் போய்விடும் போலிருக்கிறதே?"

மகேந்திரரின் யோசனைகளைக் கேட்டுப் பிரமித்த மாமல்லர், "ஏன் பகற்கனவாகப் போக வேண்டும்? யுத்தத்தினால் இந்தச் சிற்பப் பணி ஏன் தடைப்பட வேண்டும்?" என்று கேட்டார்.

"தடைப்படாமலிருக்க வேண்டுமென் பதுதான் என் ஆசை. யுத்தம் முடிவதற் குள்ளே இந்த ஐந்து கோயில்களும் பூர்த்தி யாக வேண்டுமென்று விரும்புகிறேன். அதற்காகவே ஆயனரை இன்றைக்கு இங்கே வரச் சொல்லியிருக்கிறேன். அவர் நடுக்காட்டில் போய் உட்கார்ந்திருப்பதால் வேலை நிதானமாக நடக்கிறது. அவரை இங்கேயே தங்கி வேலையைத் துரிதமாக முடிக்கும்படி சொல்லப்போகிறேன்... அதோ, ஆயனரும் வந்துவிட்டார்!...."

நரசிம்மர் ஆவலுடன் திரும்பிப் பார்த் தார். அவருடைய ஆவல் பூர்த்தியாயிற்று. சற்றுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த சிவி கையில் ஒரு பக்கத்தில் ஆயனர் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். மற்றொரு பக்கம், பட்டப்பகலில் பூரணச் சந்திரன் பிரகாசிப்பது போல் ஒரு காட்சி தென் பட்டது. அந்தப் பூரண சந்திரன் சிவகாமி யின் வதன சந்திரன்தான் என்று சொல்ல வும் வேண்டுமா?

(தொடரும்)



* பெ. தங்கசாமி

# “மனிதனை விட மரங்களை நம்புங்கள்!”

“பக்கத்திலுள்ள ஓர் ஊருக்குச் சென்று வந்தால் கூட ஐம்பது, நூறு என்று செலவாகிறதல்லவா! அப்படிச் சென்று விட்டு, வீட்டுக்கு வந்ததுமே அதைச் சம்பாதித்து விடுவேன்!” என்று புதிர் போட்டார் புதுக்கோட்டை அருகிலுள்ள சேந்தன்குடியைச் சேர்ந்த பெ. தங்கச்சாமி.

“எப்படி?” என்று புரியாமல் கேட்டோம்.

“வந்தவுடனேயே நான்கைந்து தேக்குக் கன்றுகளை நட்டு விடுவேன். சரியாகப் பராமரித்து வந்தால் இருபதாண்டுகள் கழித்து ஐந்து தேக்கு மரங்களும் இருபத்தைந்தாயிரம் ரூபாய்க்கு விலை போகும். இப்படி நான் என் தோட்டத்தில் நட்ட மரங்களின் இன்றைய மதிப்பு, சுமார் ஒரு கோடி ரூபாய்! உதாரணமாக ‘ரோஸ் வுட்’டை எடுத்துக் கொள்ளுங்கள்... ஒரு மரத்தின் மதிப்பு ஒரு லட்சம் ரூபாய். இருபது மரங்கள் என்னிடம் உள்ளன. இப்படிப் பல மரங்கள்...”

“இப்படி மரம் நடுகிற எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?”

“75—ம் ஆண்டு. என் குடும்பம் முப்பதாயிரம் ரூபாய்க் கடனில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தது. வீட்டுச் செலவுக்காக எங்கள் நிலத்திலிருந்த சில மரங்களை விற்றோம். அப்போது, ஏராளமான மரங்கள் இருந்தால் இன்னும் நிறையத் தொகைக்கு விற்கலாமே என்று எண்ணினேன். உடனே செயல்படுத்தத் துவங்கினேன். நல்ல பலன் கிடைக்க ஆரம்பித்தது. கடனும் தீர்ந்தது. சென்ற ஆண்டு மட்டும் ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மரங்களை விற்றேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!”

“மரக் கன்றுகளை எங்கிருந்து பெறுகிறீர்கள்?”

“நானே நாற்றங்கால் ஒன்று வைத்திருக்கிறேன். அதில் பல்வேறு மரவகைகளைக் கொண்ட 5,500 கன்றுகள் உள்ளன. மற்றவர்களுக்கும் கொடுக்கிறேன். திருமணம் போன்ற நிகழ்ச்சிகளுக்குச் செல்லும்போது, மரக்கன்றுகளைத்தான் பரிசாகக் கொடுக்கிறேன். ஆரம்பத்தில் அனைவரும் சிரித்தார்கள். ஆனால், எனது பரிசு மிகுந்த மதிப்புள்ள பரிசு என்பதை உணர்ந்து இப்போது பலரும் மரம் நடுவதில் ஆர்வம் காட்டுகிறார்கள்.”

“உங்களுக்குச் சொந்த நிலம் இருப்பதால் நீங்கள் மரம் நட்டு வளர்க்க முடிகிறது. நிலமில்லாதவர்கள் என்ன செய்வது?”

“ஏன், புறம்போக்கு நிலத்தில் வளர்க்கலாமே! அப்படி வளர்த்தால் அந்த மரங்கள் மட்டுமல்ல; பிற்காலத்தில் அந்த நிலமே உங்களுக்குச் சொந்தமாகும் வாய்ப்பும் சட்டத்தில் இருக்கிறதே...! நான் எனது குழந்தைகளுக்கு மட்டுமல்ல; மற்ற இளைஞர்களுக்கும் சொல்வது இதுதான்: மனிதனை நம்புவதைவிட, மரங்களை நம்புங்கள். அவை உங்களை ஒருபோதும் கைவிடாது. உங்கள் வருமானத்திற்கு மட்டுமல்ல; சுற்றுப்புறச் சூழலின் தூய்மைக்கும் மரங்கள் உபயோகமாக இருக்கும்!”

சந்திப்பு: **ஸி. சௌரிராஜன்.**

படம்: **உமா ஸ்டுடியோ.**

**கை** தொடவேண்டும் என்று ராசை யாவுக்கு இச்சையில்லை. நேர்ந்தது. காடுகள். குண்டுகள். எப்போது பார்த்தாலும் யாரோ துரத்தி வருவது போன்ற சருகோசை. இதற்கிடையில் ஒரு பெண்.

உள்ளான் குருவியைச் சுற்றி ஏழெட்டு கவண் கற்கள் பறந்து வருவது போன்ற ஒரு கிதைப்பு. உயிர்ப்படபடப்பு. இதன் நடுவில் ஓர் யௌவனம்.

ஓட்டமான ஓட்டம். இனித் தப்ப முடியாது. இனித் தாங்கவும் முடியாது. போதும்

# காதல் விழுதுகள்

செத்துத் தொலைப்போம். மரண பீதியின் சுருக்கு முடிச்சு ஒரு நெறிப்புக்கு வரும் போது மேலே பறக்கும் விமானத்துக்குக் கண் பொட்டையாகித் தூரத்தில் அகலுகிறது.

இப்படியே ஒவ்வொரு வாய்ப்பும். இனித் தப்ப முடியாது என்று வைக்கிற முற்றுப் புள்ளி வளர்ந்து கொண்டே போகும் போது பொத்தென்று எதுவோ அருகில் விழுந்த சத்தம்.

மிரண்டான். ரோந்துப் படையோ? மரத்தின் பின் பதுங்கினான். நிசப்தம். ஓசையை விட அதிகம் பயமுறுத்தும் அமைதி.

தான் வெளி வரவேண்டும் என்று-காத்திருக்கிறார்களோ?

நேரம் ஓடியது. இன்னும் நிசப்தம். கிலியும் ஆவலும். சலிப்பும் துணிவும். வெளி வந்தான். பெண். அழகு, வயசு என்று எதுவும் தென்பட வழியில்லை. குப்புற விழுந்திருந்தாள்.

தன் மாதிரியே அகதியோ? ஆம். ஓடிவிடு. மனத்தில் அடுத்த கட்டளை. தானே தனக்குச் சுமை. இதில் கூட்டாளிச் சுமை வேறா?

ராசையா கட்டளைக்குப் பணிந்தான். சில மீட்டர் ஓடியிருப்பான். பின்னால் எங்கோ யந்திரத் துப்பாக்கி ஒரு தனி ஆவர்த்தனம் போல் கொக்கரித்து ஓய்ந்தது.

நின்றான். மரப்பின்னணியில் மறைந்து கொண்டபோது அந்தப் பெண் நினைவு. கட்டளை கொடுத்த மனம் உறுத்திற்று. என்ன நாகரிகம்!

மனிதன் பைசாசமாகி உலகம் மயானமாகி எல்லாம் கை கட்டி வேடிக்கை பார்க்கும் சிதைத் தீ வேக்காடு போல் நிமிடங்கள் எரிகின்றன.

சே, மனுஷப்பூண்டு! வேரற்று விழுந்த பேய்ச்சுரை. சுடுகிறவனுக்கும் துரத்துகிறவனுக்கும் தனக்கும் என்ன வித்தியாசம்.

தான் உயிர் தப்பிவிட முடியுமா? நிச்சயமில்லை. தப்பித்துப் பிழைத்திருந்தால் மூத்துத்தளர்ந்து மூச்சு அடங்கும் வரை காட்டில் விழுந்த பெண், தன் சுயநலத்தின் புரைக்கட்டி போல நெஞ்சில் கனத்துக் கொண்டிருப்பாள்.

எந்த வீம்பில் எந்தத் தெம்பில் எந்தப் பூரிப்பில் பின்னால் நிமிர்ந்து நின்றாலும், சுய தாழ்வின் எகத்தாளச் சிரிப்பொலி என்றென்றும் கேட்கும்.

ராசையா போன தூரம் பின் வாங்கினான்.

இன்னும் அவள் குப்புறவே. கை தொட்டான். நினைவிழந்திருந்தாள். உலுக்கினான். முனகல்.

தன் வாட்டர் பேக்கில் அரைக்குடுவை தண்ணீர் மிச்சமிருந்தது. உள்ளங்கையில் கொஞ்சமாக ஊற்றி அவள் முகம் நிமிர்த்தி சன்னென்று வீசினான்.

விழித்தாள். எவ்வளவு பெரிய கண்கள். முகம் நெளிந்து உதடு துடித்தது. உலர்ந்த உதடுகள்.

"தண்ணி?" அவன் வாட்டர் ஜக்கைத் தூக்கிக் காட்டிக் கேட்டான்.

அவள் வாய் ஆவலோடு திறந்தது.

அவன் 'ஜக்'கை எச்சரிக்கையோடு கொஞ்சம் கொஞ்சமாகச் சாய்த்தான்.

பெயர் கேட்கவில்லை. ஊர் கேட்கவில்லை. குலம், கோத்திரம், உறவு எதுவும். கேட்கவில்லை.

உயிர் தப்பி விடும் என்ற ஊர்ஜிதம் வந்த பிறகுதான் எல்லாம் உதிக்கும். வேற்றுமைகளின் வித்து மரணத்தின் சந்நிதியில் ஸ்தம்பிக்கிறது.

**கா**டு முடிந்து கடற்கரைக்கு இறங்கும் மேட்டில் இரவு வந்தது. நிலா வெளிச்சத் தோடு. அவளிடம் ரொட்டியிருந்தது. அவள் வயிற்றுச் சூட்டின் கதகதப்போடு மறைத்து வைத்திருந்த ரொட்டி.

அவன் காட்டருவியில் மீண்டும் 'ஜக்'கை நிரப்பியிருந்தான். பகிர்ந்து கொண் டார்கள்.

''இனி பயமில்லை'' என்றாள்.

''ஒரு பயம்.''

''என்ன?''

''கடல் கடக்க வேண்டும்.''

''அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.''

''அவ்வளவு தைரியமா?''

''பயந்து புளிச்சுப் போச்சு.''

அவன் அவளை விநோதமாகப் பார்த் தான்:

''இதென்ன பார்வை?''

சாவுக்கும் வாழ்வுக்குமிடையே ஓடும் நூலிழையை என்ன சாமானியமாகப் பார்க் கிறாள்! இவளுக்கு வயசு பதினேழு பதி னெட்டிருக்குமா?

''ஆச்சரியம் தான்!'' அவன் வாய் மீறி வியப்பு வெளிவந்தது.

''எதுக்கு?''

''உன்னைப் பாத்த இடத்திலேயே விட் டுட்டு ஓடணும்னுதான் மொதல்லே தோணிச்சு!''

''ஏன் எழுப்பினீங்க?'' சற்றே சிரித்த வாறு கூந்தல் பின் சரிய நிலவொளியில் மின்னிய அவள் கண்ணில் முதன் முதலாக அது வெளிப்பட்டது. அசந்தர்ப்பமான வேளையில் தோன்றிய அதன் பெயர்தான் காதலா?

''பச்சாதாபம்.''

''அவ்வளவு தானா?''

''விட்டுட்டு ஓடினேன். மனசு அறுத்தது. சீ நீயும் இவ்வளவு தானான்னு. திரும்பி வந்தேன்.''

''அதுக்கு மேலே ஒண்ணுமில்லியா.''

''இல்லே.''

''இப்போ...?'' அவள் நெருங்கி வந்தாள். அந்த நிமிஷத்தை உபயோகப்படுத்திக் கொள்ள முடியும். சர்வ சுதந்திரம். காட் டருவியில் அள்ளிக்குடித்து கை உதறிவிட்டு நீ எங்கோ நான் எங்கோ என்று திக்குத் திசாந்திரம் விட்டு நீங்கிவிடும் சுதந்திரம்.

இந்த இரவு அவளுக்கும் தனக்கு மிடையே மட்டும் நினைவுகளின் அந்தரங்கச் செருகறையில் நின்றுவிடும்.



அவள் சுவாசம் அவன் மீது படர்ந்தது.

அவன் அவள் கையைத் தொட்டான். இச்சையோடு.

அவள் நிமிர்ந்து பார்த்தாள். கனவு கலைந்த மாதிரி அவள் கண்ணில் ஒரு மருட்சி. பின் தெளிவு. இதன் பொறுப் பென்னவென்று உனக்குப் புரிகிறதா என்று உலுக்கிய தெளிவு.

அவன் கையை விட்டுவிட்டான்.

ஏனென்று அவள் கேட்கவில்லை. சற்று விலகி உட்கார்ந்தாள்.

அந்த விலக்கம்தான் பெயர், ஊர், உறவு என்று எல்லாம் விசாரிக்கத் தூண்டிற்று. கேட்டான். சொன்னாள்.

''எங்கே போகப்போறே?''

''தெரியலே.''

''இந்தியாவிலே சொந்த பந்தம் உண்டா?''

''நாலு தலைமொறையாச்சு. இப்பப் போனா இருக்குமோ இருக்காதோ!''

''அப்போ?''

''விதி விட்ட வழி''

''விதி உண்டா?''

''நீங்க போனவரு வந்து எழுப்பினீங்களே?''

என்ன சொல்கிறாள் இவள்!

நான் அகதி. வழிப்போக்கன். போக்கு வழி தேடுகிறவன். வேலை, பட்டம், பதவி, வருமானம், வாழ்க்கை எல்லாம் அக்கரையில் எங்கோ. உண்டோ இல்லையோ என்று நிச்சயமற்ற மாயமான்தான் எல்லாம். பிச்சை எடுக்கிற மாதிரி. வேர்கள் எல்லாம் சுழுத்து மழையின் மண் செருக்கோடு அறுந்து போய் விட்டன. இங்கிருந்து கொண்டு போவது வெறும் கூடு.

நினைவுச் சாம்பலின் சம்புடம் மட்டும் மிஞ்சிய கூடு. உயிர் தப்பிக் கடல் கடந்தால் அந்த உயிர் மிஞ்சிய தோஷத்துக்காக வேண்டி இயற்கையாக வரப் போகும் மரணத்துக்குக் காத்திருக்க வேண்டிய கூடு.

இத்தனைதான் தோன்றியது என்ப தில்லை. இன்னும் எத்தனையோ. மங்கலாகத் தெரிந்த பால்யம், சுவாசித்து வளர்ந்த காற்று. மிதித்து உரமேற்றி வேர்களை வாங்கி இதயம் நிற்க உதவியிருந்த மண். பள்ளிக்கூடம். கடைத் தெரு.. உறவு.. நட்பு என்று அள்ளிப் பருகிய நீரோட்டம்.. களிப்பு.. துக்கம்.. கனவு.. லட்சியம். என்னென்ன அனுபவங்கள்.

தூரத்தில் கேட்ட கடலோசை. நினைக்கக் கிடைத்த அவகாசம். அவன் உடைந்தான். எல்லாவற்றையும் கொட்டிக் கதற வேண்டும் போல் மனசின் எரிமலை குமுறியது.

நல்லவேளை வெடிக்கவில்லை.

இவளிடமா.. என்னை விட இளையவளிடமா... அவன் அணையிட்டான்.

இவளுக்கும் ஒரு கதையிருக்கும். என்னை

விடச் சோகமாக. எல்லாருக்கும் இருக்கும். அவன் தன்னை அடக்கிக் கொண்டான்.

நிலா உற்சாகமின்றிக் காய்ந்தது.

அவர்கள் தனித்தனியே ஒதுங்கித் தூங்க முயன்றார்கள். அவளுக்கு வெற்றி. அவனால் தூங்க முடியவில்லை. கடலோசை. இடையிடையே யந்திரத் துப்பாக்கியின் அறைகூவல்கள். விமான நடமாட்டம்.

பின்னிரவில் அவன் அவளை நெருங்கித் தொட்டான். விழித்துக் கொண்டாள்.

''பொறப்படலாமா?''

''இன்னும் விடியலே.''

''ஏன் எழுப்பினீங்க?''

''ஒறக்கம் வரலே.''

அவள் புரிந்து கொள்ள விரும்புபவள் போல் பார்த்தாள்.

''பேச்சுத் துணைக்கு ஆரோ வேணும் போல நெஞ்சிலே ஓர் இம்சை.''

அவள் எழுந்து உட்கார்ந்தாள்.

பெண்ணுக்கு அநாதைமை எவ்வளவு சீக்கிரம் புரிந்து போகிறது!

''நெனப்பு பொளைப்பைக் கெடுக்கும்.''

''அதான் பொளைச்சுப் பாத்தமே.''

''பொளைச்ச வரைக்கும் நிம்மதிதானே''

''அந்த நெனப்பு போவுமா?''

''அதுக்கு என்ன பண்ண? ரெண்டுந்தான் உண்டு. உயிரு இருந்தா அதான் விதி. கெட்டதை விசிப்போட்டு நல்லதைப் பிடிக்க வேண்டியதுதான். கொடுத்தா வச்சிருக்கோம் அதட்டிக்கேக்கவும் வேண்டிப் பாக்கவும்?''

வாயில் தானாக வந்து விழுந்த வார்த்தை போல் அவள் சொன்னாள். தேற்றவில்லை. தெளிவு சொல்லவில்லை. எல்லாவற்றுக்கும் விலைப் பெறுமானமும் உரிய மதிப்பும் தெரிந்த விவகார அறிவோடு சொன்னாள்.

தூங்கிக் கொண்டிருந்தவளை எழுப்பிய குற்றம் உறுத்திற்று. அடுத்த உறக்கத்திற்கு உத்திரவாதமற்ற ஓட்டப் பந்தயத்தில் என்ன மடமை!

''நீ படுத்துக்க. உறங்கு.''

''பரவாஸ்லே.''

''ஒறக்கத்தைக் கெடுத்துட்டேன்.''

''விடுங்க. என்னமோ ஒரு உரிமை தோணியிருக்கு.''

உரிமை!

அவன் நினைவு அதிர்ந்தது.

அவள் எதிர்பார்ப்பதா இல்லை தான் எடுத்துக் கொண்டதா?

அவன் அவள் கையைத் தொட்டு இறுகப் பற்றினான். இச்சையில்லை. உடல் தேவையின் உபத்திரவமில்லை. கரை தட்டுப்பட்ட மாதிரி ஓர் ஆனந்த அலை.

**வி**டிவதற்கு முன்பு அவள் அவனை எழுப்பினாள். படகுத் துறையில் சிறு



'''தீபாவளிக்குப் புடைவை வாங்கித் தந்தது போதாது; ஜாக்கெட்டும் வாங்கித் தா'ன்னு பெண்டாட்டி பிராணனை வாங்குறா!''

''நியாயமாத்தானே கேட்கிறா. வாங்கித் தருவதுதானே!''

''அவ பட்டு ஜாக்கெட் கேட்டாலும் வாங்கித் தந்திடுவேன்; புல்லட் ப்ரூப் ஜாக்கெட் இல்லே கேட்கிறா?''

— கே. ஜி. எஃப். பழனிச்சாமி.

கூட்டம். பயணக் கூலியை அவன்தான் கறாராகக் கத்திரித்து நிர்ணயித்தான்.

கூட்டம் பார்த்தது. புரிந்து கொண்டது.

''ஒரு தாலியைக் கட்டி வைப்பா.'' ஒரு முதியவர் யோசனை சொன்னார். அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள். வென்றவளுக்குத் தெரியும் வெற்றியின் சின்னத்தை விட வெற்றி எவ்வளவு பெரியதென்று.

உயிர் [illegible]பி ஓடிவந்த போது

**படகில் மலர்ந்த அகதிகள் காதல்**

**வாழத்துடிக்கும் உயிர்களின் கண்ணீர் கதை**

'மாலை மலர்' நாளிதழில் வெளியான இச்செய்தியை அடிப்படையாகக் கொண்டு சிறுகதையொன்று எழுதலாம் என யோசனை தெரிவித்த வாசகர்: 'கவிட் ரவி', கும்பகோணம் — 1.





# முகத்தைப் பொத்திய மர்மக் கை!

மிக புத்திசாலித்தனமான ஒற்றன் கூட, அதிகமான தன்னம்பிக்கையில் சில சமயம் அடிச்சுவடுகளை விட்டுப் போகிறான்.

— மார்வின் மோட்ஸ் கென்னடி.

**COUNT DOWN — 11**

அஞ்சனா மைக்கேல்ராஜ்

"நீ மணிமாறனிடமிருந்துதான் வருகிறாய் என்று நான் எப்படி நம்புவது?''

ஷர்மாவின் குழப்பமான குரல் அச்சுதனின் ரத்தத்தில் சந்தோஷத்தைச் சேர்த்தது.

மணிமாறன் ஷர்மாவைப் பார்க்க வந்திருந்தான் என்பது இப்போது நிச்சயமாகி விட்டது! இனி அவன் எங்கே போயிருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் — எப்படியாவது!

''மணிமாறன் எல்லையிலிருந்து துரத்தப் பட்டதை உன்னிடம் சொன்னானா? இந்திய ஆர்மியை ஏமாற்றக் குடியானவன் போல் வேஷம் போட்டதைச் சொன்னானா? லாரியில் லிஃப்ட் கிடைத்து ஏறி வந்ததைச் சொன்னானா? இதில் எவ்வளவு தூரம் உனக்குத் தெரியும் என்று தெரியாமல் மணிமாறனைப் பற்றி நான் உனக்கு என்ன சொல்வது?'' — அச்சுதன் ஒவ்வொரு விரலாக மடக்கிக் கேட்டதும் ஷர்மாவின் முட்டாள்தனமான கண்களில் குழப்பம் அதிகரித்தது.

இவ்வளவு தூரம் கரெக்டாகச் சொல்கிறான், அப்புறம் ஏன் சங்கேத சைகை செய்யவில்லை இவன்?

''இதோ பார் ஷர்மா. சத்தியமாகச் சொல்கிறேன். மணிமாறன் ரயில்வே ஸ்டேஷனில் ஒளிந்திருக்கிறான். அவன் விட்டுப் போன பொருளை எடுத்து வரத்தான் என்னை அனுப்பினான்.''

''சரி வா. அவனை எங்கே அழைத்துப் போனேன் என்பதைக் காட்டுகிறேன்.''

ஷர்மா ஷட்டர் கதவைத் திறந்தான். அச்சுதனை அனுமதித்தான். விளக்குகளைப் போட்டான். கதவை இழுத்து மூடினான்.

காரேஜ் போன்ற அந்த இடத்தின் ஓர் ஓரத்தில் நின்றிருந்த அந்தப் பழைய காரைப் பார்த்தான் அச்சுதன். நெருப்புக் காயம் பட்டது போல் வர்ணமிழந்து, துருவேறிய அதன் உடலைப் பார்த்தான்.

இங்கே மணிமாறனுக்கு என்ன வேலை இருந்திருக்க முடியும்?

காரோ வேறு வாகனமோ எடுத்துப் போக வந்திருப்பானோ? அப்படியானால் அவன் ரயில்வே ஸ்டேஷனில் ஒளிந்திருப்பதாய்ச் சொன்ன போது ஷர்மா உஷாராகியிருப்பானே?

அச்சுதனுக்குப் புரியவில்லை.

அந்த காரேஜை கண்களால் வாரினான். மேலே இரண்டு டியூப்லைட்கள். சுவரோரமாக இரண்டு டயர்கள். ஒரு தகர டப்பா. தரையில் அங்கங்கே ஆயில் மற்றும் கிரீஸ் கறை. சுவர்கள் சேருமிடத்தில் சுவரோடு பொருத்தப்பட்ட எலக்ட்ரிக் ஒயர். உயரத்தில் ஒற்றை ஜன்னல்... அச்சுதன் பார்வையை மறுபடி வந்த வழியே செலுத்தினான்.

சுவர்கள் சேருமிடத்தில் பொருத்தப்பட்டிருந்த ஒயர்களை மறுபடி பார்த்தான். விளக்குக்கான மின்சாரம் ஸ்விட்ச் போர்டு இருந்த எதிர்ப்புறத்திலிருந்து வந்தது. அப்படியிருக்க இந்த ஒயர்களுக்கு இங்கே என்ன வேலை? ஒயர்களை அவன் பார்வை தொடர, அது காருக்கடியில் பூமிக்குள் போனது.

அச்சுதன் ஷட்டர் கதவு மூடப்பட்டிருக்கிறதா என்பதை இன்னொரு முறை பார்த்தான். காரருகே சென்று உள்ளே எட்டிப் பார்த்தான். நைந்து போன சீட்கள்.

டிக்கியைத் திறக்க முனைந்தான். தோளில் கை விழுந்தது. ஷர்மா!

''அதைத் திறக்காதே.''

''ஏன்?''

''மணிமாறன் எதையோ விட்டு விட்டுப் போனதாய்ச் சொன்னாயே. அதை மட்டும் எடுத்துக்கொள். இடத்தைக் காலி பண்ணு.''

"இதைத் திற" அச்சுதன் மிரட்டலாய்ச் சொன்னான்.

ஷர்மாவுக்கு முதன் முறையாகச் சந்தேகம் வலுத்தது.

"யார் நீ?"

"இந்தியன்."

"கெட் அவுட்." ஷர்மா அச்சுதனின் கழுத்தில் கை வைத்தான். அச்சுதன் உடம்பை அரைத் திருப்புத் திருப்பி, இடது முழங்கையை ஷர்மாவின் தாடையில் அனுப்பினான்.

ஷர்மா நிலைகுலைந்து விழுந்தான்! அச்சுதன் ராட்சஸ வேகத்துடன் செயல்பட்டான். நூறு விநாடிகள் கடப்பதற்குள் ஷர்மாவின் கைகள் முதுகுப்புறம் கட்டப்பட்டு விட்டன. கால்கள் இரண்டும் நெருக்கி, கயிற்று விலங்கில் சிக்கிக் கொண்டன.

"யார் நீ?" ஷர்மாவின் குரலில் இப்போது மிரட்டல் இல்லை. பயம் இருந்தது.

அச்சுதன் அவனை உதாசீனம் செய்தான். காரேஜ் மூலையிலிருந்து ஜாக்கிக் கம்பி எடுத்தான். காரின் டிக்கியைப் பெயர்த்துத் திறந்தான்.

டிக்கியில் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த ஆறு கார் பாட்டரிகள் அவன் புருவங்களை உயர்த்தின.

காரின் பானெட்டைத் திறப்பது சுலபமாயிருந்தது. திறந்ததும், "வாரேஹ்.... வாஹ்" என்றான். "ஒரு ரேடியோ ஸ்டேஷனை இங்கே இயங்கிக் கொண்டிருந்தது போலிருக்கிறதே."

"யார் நீ?"

"உனக்கு வேறு கேள்விகளே கேட்கத்



தெரியாதா?'' — அச்சுதன் அவனை நெருங்கி மார்பில் தன் முழங்காலைப் பதித்து உட்கார்ந்தான். ''நல்ல பிள்ளையாகச் சொல்லி விடு. மணிமாறன் எங்கே போயிருக்கிறான்?''

''தெரியாது! தெரிந்தாலும் சொல்லுவேன் என்று எப்படி நீ எதிர்பார்க்கலாம்?''

அச்சுதன் தன் பாக்கெட்டிலிருந்து நகம் வெட்டும் கருவியை எடுத்தான். ஷர்மாவின் முகத்துக்கு நேரே ஆட்டினான். ''எனக்கு நகம் வெட்டும் இந்த நெயில் கட்டர் இப்போது உனக்கு இமைகளை வெட்டப் போகிறது'' என்று ஷர்மாவின் கண்ணருகே எடுத்துப் போனதும், ஷர்மா முகத்தை இடதும் வலதுமாய் அவசரமாய்ப் புரட்டினான்.

''தெரியாது, எனக்கு சத்தியமாய்த் தெரியாது.''

அச்சுதன் ஷர்மாவின் முகத்தை ஒற்றைக் கையால் புரளாமல் நிறுத்தினான். நெயில் கட்டரை மறுபடி மிக அருகே எடுத்துப் போனான்.

''மணிமாறன் பாகிஸ்தானுடன் பேசிய போது என்னை வெளியே அனுப்பி விட்டான். அவன் என்ன பேசினான் என்று கூட எனக்குத் தெரியாது.''

அவனுடைய குரலில் அச்சம் தெறித்தது.

அச்சுதன் அவனை விடுவித்தான். அவன் பேசுவது உண்மைதான் என்று தோன்றியது.

''பாகிஸ்தானிற்கு எந்த அலைவரிசை?''

ஷர்மா சொன்னான்.

அச்சுதன் காரை நெருங்கி டிரான்ஸ்மிட்டரை முடுக்க முனைந்த போதுதான், அதைப் பார்த்தான். கையலகத்திற்கு ஒரு பேப்பர் கசங்கலாய்க் கீழே கிடந்தது. அழுக்குப் படியாமல் இருந்ததிலிருந்து அது சமீபத்தில்தான் போடப்பட்டிருக்க வேண்டும் என்று உணர்ந்தான். குனிந்து எடுத்தான். கிறுக்கப்பட்டிருந்த எழுத்துக்களைப் படித்தான்.

**N-Z-W-I-Z-H**
**H-V-O-E-Z-N-Z-M-R**
**W-Z-M-X-V-I**

ஷர்மாவின் முகத்துக்கு நேரே அந்தப் பேப்பரை ஆட்டினான். ''என்ன இது?''

''சங்கேத பாஷை. எனக்கு அர்த்தம் தெரியாது. சத்தியமாய்த் தெரியாது.''

கர்னல் அருள்தாஸ் அந்தக் காகிதத்தைப் புரட்டிப் பார்த்தார்.

''கோட் லெட்டர்ஸ்... ஏஜெண்ட்டுக்கு ஏஜெண்ட் வெவ்வேறு விதம் இருக்கும்.''

''அர்த்தம் என்ன கர்னல்?''

''எனக்கோ, உனக்கோ சட்டென்று புரிந்து விடாது அச்சுதன். இதற்கென்றே எக்ஸ்பர்ட்ஸ் இருக்கிறார்கள்.''

''நான் பார்க்கலாமா?'' கதவுக்குப் பின்னாலிருந்து சாந்தினியின் குரல் வந்தது.

கர்னல் அருள்தாஸ் புன்னகை செய்தார். ''பார், புரிகிறதா பார்!''

சாந்தினி மொஸைக் தரையில் புறாவைப் போல் நடந்து வந்தாள். முகம் சோகச் சாயம் விலகி சகஜநிலைக்குத் திரும்ப ஆரம்பித்திருந்தது. சிவப்பு ரத்தம் புலப்படும் அளவிற்கு மிருதுவாய் இருந்த நீள விரல்களால் அந்தக் காகிதத்தை அவரிடமிருந்து வாங்கினாள்.

''அண்ணன் இந்த மாதிரி எழுத்துக்களை வைத்துக் கொண்டு சில சமயம் வார்த்தைகள் அமைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் அர்த்தம் என்ன என்று எனக்குப் புரிந்ததில்லை.'' அவளுடைய குரல் ஏமாற்றத்தில் தேய்ந்தது.

''இட்ஸ் ஓ.கே.'' என்றார் கர்னல்.

''நான் உனக்கு ஒரு கடிதம் தருகிறேன், அச்சுதன். அதை எடுத்துக் கொண்டு போய் மோகனன் என்பவனை மீட் பண்ணு. அவன் ஒரு ஸைபர் எக்ஸ்பர்ட். அவன் உனக்கு ஹெல்ப் பண்ணுவான்.'' கர்னல் அச்சுதனை ஏறிட்டுப் பார்த்துச் சொன்னார்.

''நானும் வரலாமா?'' என்றாள் சாந்தினி ஏக்கத்தைக் கண்களிலும் குரலிலும் காட்டி. ''ஒரு வேலையும் செய்யாமல் இங்கே உட்கார்ந்திருப்பது எனக்கு ரொம்ப போரடிக்கிறது. அண்ணன் ஆசையுடன் ஆரம்பித்த கடையைக் கூட இரண்டு நாளாய்த் திறக்கவில்லை.''

''அமீரை அனுப்பியவர்கள் சும்மா இருக்கப் போவதில்லை சாந்தினி. கடையைக் கண்காணிப்பார்கள். எந்த ஆபத்தும் உனக்கு ஏற்படக் கூடாது என்று தான் கடையைத் திறக்க வேண்டாம் என்று சொன்னேன்,'' கர்னல் அருள்தாஸ் சக்கர நாற்காலியை அவள் புறம் திருப்பினார்.

அச்சுதன் அவரை அனுமதிக்காகப் பார்த்தான்.

''அழைத்துப் போ. ஷீ வான்ட்ஸ் எ சேஞ்ஜ்'' என்றார் கர்னல். ''ஷர்மாவை அரெஸ்ட் பண்ணி விசாரணைக்கு எடுத்துப் போய் விட்டார்கள் என்று நியூஸ் வந்தது, அச்சுதன்'' என்றார் பிற்சேர்க்கையாக.

மாருதி வேனை அச்சுதன் டில்லியின் போக்குவரத்து மெலிந்த வீதிகளில் செலுத்தினான். காற்றில் சாந்தினியின் வாசனை அச்சுதனின் நாசிகளை நிரப்பியிருந்தது. சில திருப்பங்களில் அவன் நிலைப்படுத்திக் கொள்வதற்காக அவள் புறம் சாய்ந்த போது, அவள் கூந்தலிலிருந்து விலகிப் பறந்த மயிரிழைகள் அவன் நெற்றியில்,

# காந்திக்கு ஒரு கோயில்!



காந்திஜியை நாடு அநேகமாக மறந்து விட்ட இந்த நேரத்தில், அவருக்கு ஒரு கோவில் இருக்கிறது என்பது ஆச்சரிய மான விஷயம் இல்லையா? காந்திஜியின் முழு உருவச்சிலை இங்கே பிரதிஷ்டை செய்யப்பட்டு, தினசரி பூஜைகள் நடக்கின்றன. கோவில் புது வர்ணம் பூசப்பட்டு, நன்றாகப் பராமரிக்கப்பட்டு வருகிறது. இந்தக் கோவில் எங்கே இருக் கிறது? சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தின் முன் புறம் காந்திஜிக்கான கோவில் நான்கு தூண்களுக்கு மேல் சிறிய கோபுரத்தோடு காட்சியளிப் பதைக் காணலாம். சென்ட்ரல் ரயில் நிலையப் போர்ட்டர்கள் இந்தக் கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். அன் றாடம் தங்கள் தொழிலைத் தொடங்கு வதற்கு முன் இந்தக் கோவிலுக்கு வந்து பக்தி சிரத்தையோடு வழிபட்டு விட்டுச் செல்கிறார்கள்.

தகவலும், புகைப்படமும்:
சிறுமுகை ஜி. கதிரேசன்.

---

மூக்கில், சில சமயம் உதடுகளில் வருடிய போது அவனுள் மத்தாப்புச் சிலிர்ப்பு.

''அச்சுதன், உங்களை முதன் முதலில் சந்தனக் கீற்றும், புன்னகையுமாகப் பார்த்த போது, ஒரு சாதுவான கவர்ன்மெண்ட் குமாஸ்தாவாகத்தான் நினைத்திருந்தேன்.''

''இப்போதும் நான் சாதாரண குமாஸ்தா தான். மாதச் சம்பளம் தான் வாங்கிக் கொண்டிருக்கிறேன்!'' அச்சுதன் புன்னகை மாறாமல் சொன்னான்.

ஜன்பத்தைத் தொட்டு, பார்லிமெண்ட் ஹவுஸை வட்டமிட்டு, கஸ்தூர்பா மார்கில் வேன் நுழைந்தது. உயரமான கான்க்ரீட் கட்டடங்களுக்குப் பின்னே அடக்கமாய் இருந்த பழைய வீடுகள் அடர்ந்த ஒரு சந்தை நெருங்கியது.

''கர்னல் உங்களைப் பற்றிச் சொன்னார்'' என்றாள் சாந்தினி.

''என் மேல் கொஞ்சம் நஞ்சம் இருந்த மதிப்பும் போயிருக்குமே?''

சாந்தினி சிரிக்கவில்லை.

''அன்றைக்கு என்னிடம் என்ன சொன்னீர்கள் ஞாபகமிருக்கிறதா, அச்சுதன்?'' திடீரென்று அவள் குரல் தழைந்து உணர்ச்சிகரமானதும் அச்சுதன் அவளைப் பார்த்தான். ''உனக்கு நான் இருக்கிறேன் என்றீர்களே?''

''நான் மறக்கவில்லை, சாந்தினி.''

''அப்புறம் நீங்களும் ஏன் அண்ணனைப் போல ஆபத்து நிறைந்த இந்த வேலையில் ஈடுபடுகிறீர்கள்? வேண்டாம் அச்சுதன்.''

வேன் ஓர் இடிந்த காம்பவுண்டிற்குள் நுழைந்தது. நின்றது. இறங்கினார்கள். சிமெண்ட் தூண்களில் ஆஸ்பெஸ்டாஸ் கூரைகள், ஒற்றைச் செங்கல் சுவர்களால் தடுப்புகள். கோதுமை மூட்டைகள் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப்பட்டிருந்த அந்த கோடவுனிற்குள் நுழைந்ததும் ஒரு மர நாற்காலியைக் காட்டினான் அச்சுதன்.

''இங்கே உட்கார் சாந்தினி.''

மூண்டாக கட்டி, பனியன் அணிந்த ஒருவன் பிரசன்னமானான்.

அச்சுதன் கடிதத்தைக் கொடுத்ததும் எடுத்துக் கொண்டு உள்ளறை ஒன்றிற்குள் மறைந்தான். மறுபடி வெளிப்பட்டு, அச்சுதனை உள்ளே அழைத்துப் போனான்.

சாந்தினி கோதுமை வாடையை நுகர்ந்து கொண்டு, அந்தப் புதிய, சூழ்நிலையில் ஒவ்வாமல் உட்கார்ந்திருந்தாள்.

ஐந்து நிமிடங்கள் நகர்ந்திருக்கும்.

''மேடம்'' என்று குரல் கேட்டு நிமிர்ந்தாள்.

''அச்சுதன் சார் உங்களை அழைத்து வரச் சொன்னார். இப்படி வாருங்கள். பின்புறமாகப் போய் விடுவோம்.''

அவள் வாசல்படியைத் தாண்டியதும் அவள் முகத்தைப் பின்புறமிருந்து ஒரு வலுவான கை அழுத்திப் பொத்தியது.

சாந்தினிக்கு மூச்சுத் திணறியது.

(தொடரும்)

# என் மனைவி வாங்கிய
# டீ.வி., மிக்ஸி...

ஆபீஸ் விட்டதும் மாலை எலெக்ட்ரிக் ட்ரெயினின் நெரிசலில் கசங்கிக் களைத்துப் போய் வீடு வந்தேன். திறந்திருந்த கதவைத் தள்ளி, அகலத் திறந்து உள்ளே நுழைந்த பொழுது. பழைய இரும்புக் கடையில் சகாய விலைக்கு வாங்கிப் போட்ட மின் விசிறி ஹாலில் 'லொடக், லொடக்' என சுற்றிக் கொண்டிருந்தது.

அந்த 'லொடக் லொடக்' சப்தமே இருக்கும் நிம்மதியையும் கெடுத்து விடும் போலிருந்ததால், அதை நிறுத்தப் போன நான், அறையில் நடுநாயகமாக என் மனைவி கமலா தேவி நாவல் (இரவல்தான்) வாசித்துக் கொண்டிருப்பதை கண்டு என் எண்ணத்தைக் கைவிட்டேன்.

கைப் பையை மேஜை மீது வைத்து விட்டு நாற்காலியில் உட்கார்ந்தது தான் தாமதம். கோபத்தில் பல்லை நறநறக்கிற எங்கள் ஆபீஸ் மானேஜர் மாதிரி, நாற்காலி சில விநோத சப்தங்களை உண்டாக்கியது.

என் இல்லத்தரசி நாவலைத் தரையில் நழுவ விட்டுப் பதறி நிமிர்ந்தாள்.

''நீங்களா? இப்படியா பூச்சாண்டி மாதிரி சப்தம் இல்லாம வரணும்! பயந்தே போயிட்டேன்,'' என்றாள் அவள்.

அவளை நான் பயப்படுத்தி விட்டது எனக்கு சொல்லொண்ணாச் சந்தோஷத்தைக் கொடுத்தது. 'மனைவியின் முந்தானையில் ஒளிபவன்' என்று என்னைக் கேலி செய்யும் நண்பர்கள், என்னால் என் மனைவி பயந்து நடுங்கி நிற்பதைப் பார்த்திருக்க வேண்டுமே! (அந்தச் சமயம் அவள் படித்துக் கொண்டிருந்தது பயங்கர மர்ம நாவல் என்பதால்தான் பயந்தாள் என்பது வேறு விஷயம்.)

கமலா உள்ளே சென்றாள். நான் கை, கால் கழுவி உடை மாற்றிக் கொண்டு காப்பிக்காகக் காத்திருந்தேன். உள்ளே காப்பி மணத்தது. சற்று நேரத்தில் என் இல்லாள் இல்லாதவளாக அதாவது காப்பி இல்லாமலே வந்தாள்.

''ஏங்க, நீங்களும்தான் சம்பாதிக்கிறீங்க. எதிர் வீட்டுச் சங்கரனும்தான் சம்பாதிக்கிறான். அவன் எப்படி பிரிட்ஜ், கலர் டீ.வி., வீடியோன்னு அமர்க்களமா இருக்கான்! நீங்களும் இருக்கீங்களே ஒரு முழம் பூவுக்கும் வக்கில்லாம...'' என்று பொரிந்தாள்.

(காப்பி மணத்ததே! ஏன் தரவில்லை! எல்லாவற்றையும் தானே குடித்து விட்டாளோ!)

அவளுடைய பேச்சின் மீது எனக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. ஏனெனில், சம்பாதிப்பவன் நானென்றாலும் செலவழிப்பவள் அவளாயிற்றே! முதல் தேதி சம்பளம் முழுவதையும் பிடுங்கிக் கொண்டு, தினமும் ஆபீஸ் புறப்படுகிற சமயத்தில் கையில் ஒரே ஒரு ரூபாய் தருவாள். அதையும் பஸ், டீ என செலவழித்து விடாமல் சாயங்காலம் வீடு திரும்பியதும் முழு நோட்டாய் அப்படியே அவளிடம் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். இந்த லட்சணத்தில் கலர் டீ.வியும், பிரிட்ஜும் அவளுக்கு நான் எப்படி வாங்கிக் கொடுக்க முடியும்! இப்பொழுது இருக்கும் கறுப்பு — வெள்ளை டீ.வி.யே என் சினேகிதன் புது டீ.வி. வாங்கும் பொழுது பழையதைப் பழைய விலைக்குக் கொடுத்தது.

என்ன பதில் சொன்னாலும் அவளுடைய வாயில் அகப்பட்டு அவஸ்தைப்படப் போகிறவன் நான்தான். எனவே, எதுவும் பேசாமல் காப்பி கிடைக்காதா எனச் சோர்வுடன் காத்திருந்தேன்.

''நகையென்ன, நட்டென்ன, ஜரிகைப் புடவையென்னன்னு அந்தச் சங்கரனின் சம்சாரம் அம்மன் சிலை மாதிரி அலங்கரிச்சுக்கிட்டுப் போறா... எனக்கு நீங்க என்னத்தை வாங்கித் தந்திட்டீங்க!''

'சரிதான். அடுத்தாத்து அம்புஜத்தைப் பார்த்தேளா...' என்று இவள் பாடத் தொடங்கி விட்டாள். பல்லவி, அநுபல்லவி முடிந்து காப்பி எப்பொழுது கிடைக்கும்!

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''காப்பி தாயேன்,'' என்றேன்.

''காப்பியா? இன்னும் குடிக்கலையா?'' என்றவள் சமையலறையிலிருந்து ஆறின காப்பியைக் கொண்டு வந்தாள். ஒன்றுமில்லாததற்கு இது பரவாயில்லை என,

பத்மா மாத்ரே



அந்தக் குளிர்ந்த திரவத்தை வயிற்றினுள் ஊற்றினேன்.

"என்னங்க, நான் பாட்டுக்குச் சொல்லிட்டிருக்கேன். நீங்க பாட்டுக்கு..."

"கேட்டுட்டிருக்கேன்... சம்பளப் பணத்தை உங்கிட்டேதானே முழுசாக் கொடுக்கிறேன். கலர் டீ.வி.யோ, பிரிட்ஜோ நீதானே வாங்கணும்..."

"ஆமா, பெரிய சம்பளப் பணம்! எண்ணூறு ரூபாய்ல 'நானானதால இந்தக் குடும்பத்தை நடத்தறேன்...'' என்று தோள்பட்டையில் மோவாயை இடித்துக் கொண்டாள் என் தர்மபத்தினி.

அவள் சொன்ன தோரணையைப் பார்த்து, ஏதோ பெரிய குடும்பத்தை நடத்துவதாய் நினைத்துக் கொள்ளாதீர்கள். நானும், என் மனைவியும், எங்கள் செல்வ புத்திரன் ஒருவனும்தான்.

கமலா திடீரென நினைத்துக் கொண்டவள் போல் சொன்னாள். "உங்க ஆபீஸ் சொஸைட்டியிலிருந்து பணம் கடன் வாங்குங்களேன்."

"எதுக்கு கமலா? கலர் டீ.வி. வாங்கவா, பட்டுப் புடைவை வாங்கவா அல்லது நகை செய்யவா? எனக்கு மிஞ்சிப் போனால் இரண்டாயிரம் ரூபாய்தானே கடன் கிடைக்கும்..." என்று என்னையறியாமல் கிண்டல் பண்ணி விட்டேன்.

என் மனைவி என்னை ஒரு பார்வை பார்த்தாளே பார்க்கலாம்.

"டீ.வி. மட்டுமல்ல, பிரிட்ஜ், மிக்ஸி எல்லாம் வாங்கப் போறேனாக்கும். இன்ஸ்டால்மெண்ட்டில் வாங்கிட்டாப் போச்சு."

எனக்குத் தலையைச் சுற்றியது.

"தவணை முறையிலா! மாதத் தவணை எக்கச்சக்கமா வருமே!"

"அது என் கவலை. நீங்க சொன்னதை மட்டும் செய்யுங்க" என்று கட்டளையிட்டாள் என் துணைவி.

மறுதினமே நான் கடனுக்கு எழுதிப் போட்டேன். அது சாங்ஷனாகிக் கையில் கிடைப்பதற்குள்ளாகவே வீட்டில் சிக்கனக் கெடுபிடி ஆரம்பமாயிற்று. முதலில் பெட் காப்பி கட். மோரில் தண்ணீர் பஞ்சமின்றிச் சிரித்தது. சாம்பார் சாதத்திற்கு ஏங்கும்படியாக ரசத்தின் நடமாட்டம் அடிக்கடி இருந்தது. சில சமயங்களில் 'காய்கறி விலை எக்கச்சக்கமாய் ஏறிட்டுதுங்க' என்று அப்பளமும், ரசம் சாதமுமாக என்னைப் பட்டினி போட்டு விடுவாள் பாவி.

ஒருநாள் மாலை நான் வீட்டுக்குள் நுழைந்த போது, என் கண்ணில் பட்டவை. மேஜை மீது கடை பரப்பி வைக்கப்பட்டிருந்த புதிய பிளாஸ்டிக் கூடை. அலுமினிய தம்ளர், ஓர் ஊர் பேர் தெரியாத சோப்புக் கட்டி. ஓர் எவர் சில்வர் தேக்கரண்டி.

''இதெல்லாம் புதுசா வாங்கினியா கமலா?''

''பைசாச் செலவழிக்காமல் சிக்கனம் பிடிக்கும் வழியைத் தேடிட்டு இருக்கேன். நானா போய் இதையெல்லாம் விலை கொடுத்து வாங்குவேன்! எல்லாம் இனாமாய்க் கிடைத்தது'' என்றாள் கமலா.

''இனாமா? இனாம் கொடுத்த புண்ணியவான் யார்?''

கமலா உள்ளே போய் ஒரு பெரிய பையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்தாள். சேல்ஸ் கேர்ள் மாதிரி ஒவ்வொரு சாமான்களாக எடுத்துக் காட்டினாள்.

''இந்தச் சோப்புப் பொட்டலத்தோடு கிடைத்தது பிளாஸ்டிக் கூடை. பால் பவுடர் டப்பாவோடு தம்ளர் கிடைத்தது. இந்தப் புண் களிம்பு டப்பாவோடு சோப்புக் கட்டி கிடைத்தது...'' என்று அடுக்கிக் கொண்டே போனாள் என் புத்திசாலி மனைவி.

'எத்தனை சாமான்களைப் பைசா செலவழிக்காமல் பெற்றிருக்கிறேன் பார்த்தீங்களா!' என்ற பெருமை அவளுடைய குரலில் ஆத்திர வெள்ளப் பெருக்கு போல் பொங்கி வழிந்தது.

சோப்புப் பவுடர் பேக் ராட்சசத்தனமான பெரிய சைஸ்.

''இவ்வளவு நமக்கு எதுக்கு கமலா? இது ஒரு ஆறு மாதம் வரும் போலிருக்கே!''

''வரட்டுமே. கெட்டுப் போகிற பொருளா என்ன!'' என்றாள் சர்வ அலட்சியமாக.

''டின் பாலை நாம உபயோகிப்பதில்லையே!'' என்று இழுத்தேன்.

''அதற்கென்ன, உபயோகிச்சாப் போச்சு!'' என்று அதற்கும் விடை தயாராய் வைத்திருந்தாள்.

''நம் வீட்டிலே யாருக்கும் புண்ணு பொடி உண்டாவதில்லையே....!''

''அதற்கென்ன, உண்டாக்கிக்கிட்டாப் போச்சு'' என்றவள் சட்டென நாக்கைக் கடித்துக் கொண்டு என்னைப் பார்த்து ஒரு முழி முழித்தாள். அடேயப்பா! பத்திரகாளி தோற்றாள் போங்கள்!

''இத்தனை சாமான்களை இனாமா அள்ளிட்டு வந்திருக்கேன். ஒரு புகழ் மொழி இல்லை. வக்கணையைப் பாரு வக்கணையை.'' என்று அவள் சீறவும் நான் வாயை இறுக்கமாய் மூடிக் கொண்டு விட்டேன்.

ஒருவழியாக லோன் பணம் கிடைத்தது. ஒரு சுப முகூர்த்தத்தில் கலர் டி.வி.யும், வீடியோவும் வந்து சேர்ந்தன. மாலை ஆறு மணியானால் வீடு முழுவதும் ஜனப் பெருக்கம்.

காப்பிக்காகச் சமையலறைக்குள் நுழைந்தால், அங்கே என் மனைவி ரகசியக் குரலில், ''இத்தனை பேர் இருக்க நீங்க மட்டும் தனியாகக் காப்பி குடித்தால் நல்லாயில்லே. அதனால், காப்பி கிடையாது!'' என்றாள்.

எனக்கு அடிவயிற்றிலிருந்து ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவளுடைய தலைமுடியைப் பிடித்து இழுத்து... டி.வி., பிரிட்ஜையெல்லாம் வெளியே எறிந்து... எல்லாம் என் கற்பனையில் செய்து பார்த்து என் ஆத்திரத்தைத் தணித்துக் கொண்டேன்!

## பிஞ்சுகளின் முதுகில் பாறைகள்...

நம் கல்வி —
அறிவுக்குக் குழி தோண்டி
படிப்புக்குப் பந்தல் போடுகிறது...

தரத்தை உயர்த்துவதாய்க் கூறிப்
புத்தகங்களின்
எடையைத்தான் உயர்த்தினார்கள்...!

பிஞ்சுப் பூக்கள்
புத்தகப் பொதி சுமந்ததில்
வளர்ந்தது —
படித்த வர்க்கமல்ல...
நெற்றியில் சுருக்கமே...!

இந்தப் புத்தக மலையைச்
சுமந்தால் —
அனுமனுக்கே கூட
பலம் அற்றுப் போய் விடும்...!

நுழைய வேண்டிய படிப்பு
திணிக்கப் படுகையில்
சேர வேண்டிய பண்பு
திமிராகி விடுகிறது...!

வாழ்வின் அச்சுறுத்தலைக்
கல்வியில் திணித்து
ஆன்மாவின் வேர்களை
அசைத்து விடாதீர்கள்...!

— வ. பாலா சுப்ரமணியன்

"எதுக்கு, என்னைச்... 'சமாதானம்' பண்றீங்க?"

"உங்களுக்கு, 'அம்பது ரூபாய், தரலாம்னு இருந்தேன்! வாசல்லேயே, பியூன் பத்து ரூபாயும், எழுத்தர் இருபது ரூபாயும், வாங்கிட்டாங்க...!"

— ஆர். அப்துல் சலாம்.





நிருபர்: நீங்க ஆச்சரியப்படுகிற மாதிரி நிகழ்ச்சி ஏதாவது உண்டா?

நடிகை: எனக்குக் கல்யாணமாகி, முழுசா ஒரு மாசம் ஆயிடுச்சு; அப்படியும் அவரை 'டைவர்ஸ்' பண்ணனும்ங்கிற எண்ணம் வராததுதான் பெரிய ஆச்சரியமா இருக்கு!

— சீர்காழி வி. ரேவதி.

ஃபிரிட்ஜ் பற்றிக் கேட்கவே வேண்டாம். அது புது மனைவி போல் பார்வைக்குக் கவர்ச்சியாகத்தானிருந்தது. திறந்து பார்த்தால்தான் அது வெள்ளையடித்த குப்பை மேடு என்பது தெரியும். குப்பிகளில் கலர் தண்ணீரை நிரப்பி வைத்திருந்தாள். சில மலிந்த காய்கறிகள் ஒரு பக்கம் சிறைப்பட்டுத் துவண்டு கிடந்தன. பப்படத்தைப் பொறித்து அதை ஃபிரிட்ஜில் பத்திரப் படுத்த அது பழந்துணியாய் வாடிப் போயிருந்தது.

வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, "கமலா, யாராவது பார்த்தா என்ன நினைப்பா! மெழுகில் செய்த பழங்களை யாவது வாங்கி அடுக்கக் கூடாதா!" என்று நான் கேலியாகச் சொல்லப் போக என் மனைவி நிஜமாகவே மெழுகில்செய்த பழங் களை வாங்கி வந்து அடுக்கி விட்டாள்!

மிக்ஸி மட்டும் வேலையில்லாமல் தூங்கிக் கொண்டிருந்தது. அதை உபயோகிக்காவிட்டாலும் பார்வையாளர்களுக்காகத் தினமும் துடைத்து வைத்து விடுவாள்!

ஒருநாள் மாலை ஆபீஸ் முடிந்து வீடு திரும்பும் பொழுது, வழக்கத்திற்கு மாறாக நிசப்தம் என்னை வரவேற்றது. வாண்டுகளின் நடமாட்டத்தையும், இளந்தலைகளின் குலுக்கலையும், பொக்கை வாய்களின் சிரிப்பையும் காணவில்லை. ஹாலில் டீ.வி.யையும், வீடியோவையும் காணவில்லை. ஓஹோ, ரிப்பேரா! இன்றைக்காவது காப்பி கிடைக்குமா என்று சமையலறைக்குள் புகுந்தேன். அங்கு ஃபிரிட்ஜ் இருந்த இடமும் காலியாயிருந்தது. எல்லாம் ஒரே சமயத்தில்எப்படி ரிப்பேராகி விட்டன என்று மனைவியைக் கேட்டேன்.

அவள் ஒரு சில நிமிடங்கள் என்னைப் பார்த்தாள். வழக்கமான முறைப்பு அல்ல; பரிதாபமான பார்வை. மூஞ்சியைப் பார்த்தால் அழுது விடுவாள் போலிருந்தாள். அவளுடைய அந்த அழுமூஞ்சி என்னை சந்தோஷப்படுத்தியது. தினமும் என்னையல்லவா அழ அடிக்கிறாள்!

மெல்ல அவள் சொன்னாள், "எல்லாத்தையும் பொறுக்கிக்கிட்டுப் போயிட்டான்."

"ஏன்?" என்று பொய்யாகப் பதறினேன்.

"மூணு மாச தவணை பாக்கி."

"ஐய்யோ, நீ ஏன் கட்டவில்லை?" என்று குரலில் சோகத்தை வழிய விட்டேன்.

"ஆமா, பெரிய மானேஜர் பதவியிலே ஆயிரக்கணக்கிலே சம்பளம் வாங்கிட்டு வர்றீங்க இல்லே... எண்ணூறு ரூபாய்ச் சம்பளத்தில் என்னத்தையெல்லாம் செய்வது? எலக்டரி பில்லும் எக்கச்சக்கமா வர ஆரம்பிச்சுட்டுது. அப்புறம் பேப்பர் பில், மளிகைக் கடைக்காரன், பால்காரன் என்று அழுதிட்டுத் தினமும் காய்கறி வாங்கவே பணம் போதமாட்டேங்குது. இதிலே பிரிட்ஜுக்கும், டீ.வி.க்கும் இன்ஸ்டால்மெண்ட் எப்படிக் கட்டுவதாம்?" என்று சிறியவள் 'ஓ'வென ஒப்பாரி வைக்க ஆரம்பித்தாள்.

அப்பாடா என்றிருந்தது. 'இனி சிக்கனம் என்ற பெயரில் பட்டினி போட முடியாதல்லவா!' என மனத்திற்குள் உற்சாகமாக விசிலடித்துக் கொண்டாலும் வெளியே சோகமான முகத்துடன், "போகட்டும் கமலா, நம்ம பையன் சம்பாதிக்கிற காலத்திலே எல்லாம் வாங்கி அனுபவிக்கலாம்!" என்றேன்.

# கோட்டை விட்டார்கள்!



### கொதிக்கும் வெந்நீரில் கைவிட்டு...

ஆண் பாவம் படத்தில் சீதா, ஆற்றங்கரையில் பாண்டியன் கொடுக்கும் கடிகாரத்தை குடத்துத் தண்ணீரில் போட்டு வீட்டுக்கு எடுத்து வருகிறார். சீதாவின் அம்மா, அக் குடத்தை வாங்கி, அப்படியே ஊற்றி ஒரு பாத்திரத்தில் குளிப்பதற்காகக் கொதிக்க வைக்கிறார். ஆவி பறக்கும் சுடுநீர்ப் பாத்திரத்தைத் துணியின் உதவியினால் அடுப்பிலிருந்து எடுத்து, பாத்ரூமுக்குக் கொண்டு செல்கிறார் சீதா. தண்ணீருக்குள் கைவிட சுடுகிறது. பின், கடிகாரத்தைத் தண்ணீரிலிருந்து எடுக்க ஒரு பாத்திரத்தின் மேல் தாவணியைப் பரப்பி, சுடுநீர்ப் பாத்திரத்தை இப்பொழுது வெறும் கைகளாலேயே தூக்கி, சர்வசாதாரணமாக வடித்துக் கடிகாரத்தை எடுத்துக் கொள்கிறாரே! எப்படி? டைரக்டர் கோட்டை விட்டு விட்டாரே!

— ஆர். சுப்பையன், பி.ஏ., இரண்டாம் ஆண்டு, எக்னாமிக்ஸ், பிருந்தாவன் ஆஸ்டல், ஸ்ரீ வாசவி கல்லூரி, ஈரோடு — 638 316.

### உள்ளே புகுந்தது எவ்வாறு?

படம்: மௌனராகம்

இடம்: மோகனும் ரேவதியும் ஷாப்பிங் சென்று விட்டு வீட்டுக்குத் திரும்பியவுடன், மோகன் சாவியின் உதவியுடன் கதவைத் திறப்பார். வீட்டினுள்ளிருந்து மோகனின் ஆபீஸ் நண்பர்கள், மோகன் — ரேவதிக்கு வாழ்த்துக் கூறுவார்கள். பூட்டிய வீட்டிற்குள் அவர்கள் எப்படி வந்தார்கள்?

— இரா. ஆதி நாராயணன், பி.எஸ்.ஸி. இரண்டாம் ஆண்டு (புள்ளியியல்), மன்னர் சரபோஜி கல்லூரி, தஞ்சாவூர்.

* மௌனராகம்



### ஆங்கில வீடியோ டி.வி. செய்தியானது!

புரியாத புதிரில் ரகுவரனைக் கொலை செய்ய வரும் நபர் (அதாவது ஜெயிலிலிருந்து தப்பி வந்து, ரகுவரனைக் கொலை செய்யவரும் ரகுமான்) டெக்கை 'ஆன்' செய்து விட்டு, டி.வி. ஸ்கிரீனில் ஆங்கிலப் படம் ஓடிக் கொண்டிருக்கும்போதே ரகுவரனைக் கொலை செய்வதாக அமைந்திருக்கும். ஆனால், ரேகாவின் ஃப்ளாஷ்பேக்கில், கொலை செய்யப்பட்ட ரகுவரனைக் கண்டு அழும் போது, டி.வி.யில் யாரோ ஒருவர் செய்தி வாசிப்பார் (?) வீடியோ காட்சி திடீரென்று எப்படி டி.வி. காட்சியாக மாறியது என்பது இன்று வரை எனக்குப் புரியாத புதிராகவே உள்ளது.

— கே.சு. பக்தவச்சலம், அண்ணாமலை பல்கலைக் கழக DCPI அஞ்சல் வழி) 101, வீரபாண்டியன் தெரு, விருத்தாசலம் — 1.



* மருமகள்

### கண்டு கொள்ளவில்லையே!

'மருமகள்' படத்தில் கீதா என்ற கதாபாத்திரத்தின் இடத்தில் ராதாவை (ரேவதி) கீதாவாக நடிக்க வைக்கின்றனர். ராஜாவும் (சுரேஷ்), அவன் நண்பனும் (ஒய். ஜி. மகேந்திரன்) ஒரு காட்சியில் ராஜா கீதாவாக நடிக்கும் ராதாவைப் பார்த்து, "ராதா உன் அதிகாரத்தையெல்லாம் என்கிட்ட காட்டாதே!" என்று வசனம் பேசுகிறார். இதை அங்கே மனோரமா உட்பட பலரும் கேட்கின்றனர். ஆனால் யாரும் அதைக் கண்டு கொள்ளவில்லை.

— ச. செந்தில்வேலன், III பி.எஸ்.ஸி., (பிஸிக்ஸ்), எம். ஜி. ஏ. கல்லூரி, வேலூர் — 2.



* சந்தனக்காற்று

## சரியாய்ப் போடாத சாமியார் வேஷம்!

''கங்கைக் கரையில்'' எனத் தொடங்கும் பாடல் காட்சியில் ராம்கி காவி உடைக்குள் ''பேண்ட்'' அணியவில்லை. ஆனால் சிலையைக் கடத்திய பின் நாசருக்கு எதிரில் காவியுடையைக் கழற்றும் போது மட்டும் ''பேண்ட்'' ''சர்ட்'' போட்டிருக்கிறாரே எப்படி?

— எல். ராஜா ராமநாதன், இரண்டாம் வருடம் மின்னியல் மற்றும் மின்னணுவியல் பிரிவு, நாச்சிமுத்து பாலிடெக்னிக், பொள்ளாச்சி.

## கல்லூரியில் ஒன்பதாம் வகுப்பா?

'நானும் இந்த ஊருதான்' படத்தில் ஓடக்காரனான முரளியின் மீது காதல் கொண்டு குஷ்பு புத்தகத்தை ஓடத்திலேயே விட்டுச் செல்லும் போது, முரளி குஷ்புவை அழைத்துப் புத்தகத்தைத் தருகிறார். அப்போது திரையில் 9ம் வகுப்பு கணிதப் புத்தகம் காட்டப்படுகிறது. குஷ்புவும், தோழிகளும் ''காலேஜ் போகிறோம்'' என்றும், குஷ்புவின் தாய் லட்சுமி, ''என் மகள் காலேஜ் போகிறாள்'' என்றும் கூறுகின்றனர். எந்தக் காலேஜிலாவது 9வது வகுப்புப் புத்தகம் உள்ளதா?

— டி. பி. சுந்தர வேல்முருகன், அறை எண்: 23, சுவாமிஜி இல்லம், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலய கலைக் கல்லூரி விடுதி, கோவை — 20.

## சூலம் நட்டது யார்?

சமீபத்தில் வந்த 'சந்தனக் காற்று' என்ற படத்தில், கௌதமி, அம்மன் முன் உள்ள சூலத்தால் வயிற்றில் குத்திக் கொண்டு இறக்கிறார். விஜய்காந்த் அச் சூலத்தை கௌதமியின் வயிற்றிலிருந்து இரத்தத்துடன் பிடுங்கி மண்ணில் எறிகிறார். ஆனால், அடுத்த சீனிலேயே அம்மன் முன் அதே சூலம் சுத்தமாய் நிற்கிறது. திரும்பவும், ஃப்ளாஷ்பேக்கிலும் அப்படியே காட்டுகின்றனர். அந்த இரவு நேரத்தில் இறந்து போன கௌதமியையும், விஜய்காந்தையும் தவிர யாருமே இல்லை. யார் வந்து சூலத்தைக் கழுவி மண்ணில் நட்டு வைத்தனர்? நம் தமிழ்ப் படத்தில் கண்டினியூட்டியே கொஞ்சம் கூட இல்லை.

— எஸ். தமிழ்ச் செல்வி (பி. எஸ்ஸி.,) கணிதம், 16—A, திருவள்ளுவர் தெரு, சிதம்பரம் — 608 001.



* கிழக்குவாசல்

## இடுகாட்டில் உடை மாற்றமா?

'கிழக்கு வாசல்' திரைப் படத்தில் கார்த்திக்கின் தாய் மனோரமாவை அடக்கம் செய்யச் செல்லும்போது, கார்த்திக் வேஷ்டியும், துண்டும் அணிந்திருப்பதாகப் பாடல் காட்சியில் வரும். ஆனால் எரியூட்டும் பொழுது வேஷ்டி துண்டுடன் சட்டையும் அணிந்திருப்பதாகக் காட்டப்படுகிறது. இடுகாட்டில் போய் உடை மாற்றினாரா?

— சி. கே. சாந்தகுமார், இரண்டாம் ஆண்டு பி. ஈ., சிவில் கன்ஸ்ட்ரக்சர்ஸ், அண்ணாமலை யுனிவர்சிடி, சிதம்பரம்.

படங்கள்: **பிலிம் நியூஸ் ஆனந்தன்**

**பிரசுரமான துணுக்குகளை எழுதியவர்களுள் ஒருவர் (எல். ராஜாராமநாதன், 1/42 A, பஜனை கோவில் வீதி, அங்கலக்குறிச்சி — 642 007) ரூ. 50 பரிசுக்குக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டார். மற்றவர்களுக்கு ஆறுதல் பரிசு.**

# சிகரங்களை நோக்கி...

## 2

**வைரமுத்து**

**முதல் இதழ்ச் சாரம்**

நகரத்தின் மசல் நாகரிகத்திலிருந்தும், எந்திரக் கலாச்சாரத்திலிருந்தும் மரபு ரீதியான உறவுகளின் நரம்புச் சங்கிலிகளிலிருந்தும் தன்னைத் துண்டித்துக் கொள்ளத் துடிக்கிற ஒரு கலா ஜீவியான திருஞானம், வீட்டை விட்டு மௌனமாய் வெளியேறுகிறான். இந்த நூற்றாண்டில், மனிதன் தொலைத்து விட்ட வாழ்க்கையைக் கண்டெடுத்து, அவனுக்கே அதைப் பரிசளிக்க வேண்டும் என்ற கனவு சுமந்து, அந்த மலை கிராமத்தை நோக்கி அவன் பயண மாகிறான்.

அவன் அந்தப் பேருந்தின் ஜன்னல்
கம்பியில் தலைசாய்த்திருந்தான்.
மயில்தோகையில் நடுப்பக்கம் — தாமரைப் பூவில்
உட்பக்கம் — பேருந்தில் ஜன்னலோரம்
ரசிக்கத்தக்கவை.

ஆனால், உடம்பும் மனகம் விழுந்து கிடந்தன.

கண்கள் மட்டும் தூரங்களில் தூண்டிவிட்டுக்
கொண்டே வந்தன.

இது யாத்திரையா? நாடு கடத்தலா?

நான் பிரஜையா? அகதியா?

நான் வெளியேறியது கூண்டை விட்டா?
கூட்டை விட்டா?

மௌனங்களின் பட்டிமன்றத்திற்குத்தீர்ப்புச்
சொல்லத் தெரியாமல் பெருமூச்சு
வெளிநடப்புச் செய்தது.

●

திடீரென்று ஒரு சில்லென்ற காற்று; சிறகு
முளைத்த காற்று; கண்களுக்குள் புகுந்து
படலங்களில் பசை தடவிய காற்று.

உள்ளாடைக்குள் புகுந்து
மயிர்க்கால்களில் மழை விழ வைத்த காற்று.

உடம்பும் மனகம் ஒரே பொழுதில்
எழுந்து கொண்டன.

ஓ! அடிவாரம் வந்துவிட்டது.

தான் எழுந்து வந்து வரவேற்க முடியாது
என்பதால்தான் மலைராணி
வாடைக்காற்றின் கையில் பூச்செண்டு
கொடுத்து வரவேற்கிறாள்.

மனிதக் குடல்களைப் போல மடிப்பு
விழுந்த அந்த மலைச்சாலையில்
விறகு சுமந்தேறும் கர்ப்பிணியைப் போல
மெதுவாய் ஏறியது பேருந்து.

தரைக்கோலம் மெல்ல மெல்ல மறைந்து
மலைக்கோலம் மலர்ந்தது.

திருஞானம் தீட்சை பெற்றான்.

●

இதுதான் —
இதுதான் நான் தேடுவது.
இதுதான் —
இதுதான் என் ஆன்மாவின் குளியலறை.
இதுதான் —
என் கனவுக்குள் நான் காணும் கனவு.

அதோ! பள்ளத்தாக்கை மூடியிருக்கும்
பச்சைமரகதப் பந்தல்.

அதோ! சிறகில் மட்டும் நீலம் பூசியிருக்கும்
சின்னப் பறவைகளின் சில்மிஷங்கள்.

இதோ! இரவின் மழைக்குளியலை
இன்னும் துவட்டிக் கொள்ளாத
தாவரங்கள்.

எங்கோ தூரத்தில் சில்வண்டுகளின்
ஜனகணமன.

அது என்ன?
நீக்கொழுந்தில் பனித்துளிகளா?
இல்லை!
தளிர்களில் மழைத்துளிகள்.

அதோ! அதோ!
எங்கள் பெண்களைக் கேலி செய்ய, தங்கள்
கொண்டையில் பூ வைத்த கொடிகள்.

ஆனால், எங்கள் பெண்களை விடக்
கொடிகள் சீர்திருத்தவாதிகள்.

பூவறுத்தால் கொடிகள் புலம்புவ
தில்லை; மறுபடியும் பூத்துக் கொள்
கின்றன.

அதோ! குழந்தை எதுவும்

குடிக்க வராததால் — மலைமங்கை வடிக்கும்
முலைப்பாலாய்த் துள்ளி விழும் வெள்ளி
அருவி.

●

அடடா! ஓசைகள் இல்லாமல் ஓர் உலகம்.
கரியமிலவாயு இல்லாத காற்று.
சொற்பக் கட்டணத்தில் ஒரு சொர்க்கம்.

நகரங்களில் வழித்தெடுக்கப்பட்ட வாழ்க்கை
இங்கேதான் ஊற்றி வைக்கப்பட்டிருக்
கிறதோ?

கரன்சிகளுக்குள் காணாமல் போன
மனிதனை
இங்கேதான் கண்டெடுக்க வேண்டுமோ?

அடே பழைய கௌதமா!
அவசரமாய் அழைக்கிறேன் வா.

என் உடம்பெல்லாம் கண்களாகக்
கடவது என்று சபி.

காணக் கண்ணிரண்டு காணாது
கௌதமா.

●

தன்னை மறந்த லயத்தில்
திரும்பிப் பார்த்தான் திருஞானம்.

அவனையும் ஓட்டுநரையும் தவிர,
எல்லோரும் பாதி நித்திரை
யோடு பயணித்துக் கொண்டிருந்தார்கள்.
அவர்களுக்காகஒருநிமிடம்மௌனஅஞ்சலி
செலுத்தினான்.

விழிக்க மாட்டீர்கள்.

வியாபாரிகள் நீங்கள்.

பணங்காய்த்தால் மட்டுமே நீங்கள்
மரம் பார்ப்பீர்கள்.

வைரத்துண்டுகள் விழுந்தால் மட்டுமே
நீங்கள் மழை பார்ப்பீர்கள்.

தங்கம் வழிகிறது என்று தகவல்
வந்தாலொழிய நீங்கள் தவிர்பார்க்க
மாட்டீர்கள்.
ஈரக்காற்று ஆகாதென்று காதுகளைக்
கட்டிக் கொண்டவர்களே!

இயற்கை ஆகாதென்றா கண்களையும்
கட்டிக் கொண்டீர்கள்?

நிமிர மாட்டீர்கள்.

நீங்கள் நிமிரவே மாட்டீர்கள்.

வருஷமெல்லாம் வயிற்றையே பார்த்துக்
கொண்டிருப்பதால் உங்கள் தலை
கவிழ்ந்தே கிடக்கிறது.

●



ஓ! என்ன இது...? பாறை மீது ஒரு பசுமரம்.
வெடிகுண்டுக்குப் பிளக்காத பாறை, வேருக்குப்
பிளந்திருக்கிறதே!

நான் யாருக்குப் பாராட்டுப் பத்திரம் வாசிக்க?

பாறைக்குள் புகுந்த வேருக்கா? அல்லது
வேருக்கு நெகிழ்ந்த பாறைக்கா?

நன்றியுள்ள மரம்.

தனக்கு இடம் கொடுத்த பாறைக்குக்
குடைபிடித்து நிற்கிறதே — நன்றியுள்ள
மரம்.

முளைப்பதற்கு எந்தப் பாறையிலும்
இடமிருக்கிறது; மனிதனுக்குத்தான்
வேர்களில்லை.

●

"நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!"

திருஞானத்தின் கூச்சலில் குலுங்கி
நின்றது பேருந்து.

பயணிகள் கனவு கலைந்தார்கள்.

திருஞானம் தாய்நாடு அடைந்த அகதி மாதிரி
தாவிக் குதித்தான்.

சாலை ஓரமாய் பாறைகளின் பிளவிலிருந்து
குதித்துக் கொண்டிருந்தது ஒரு குழந்தை
அருவி.
ஒரு சிறுவன் மிட்டாய் மலையைப் பார்ப்பது போல்,

அந்த அருவியை அண்ணாந்து பார்த்தான்.

உள்ளங்கையில் நீரள்ளி உயிர்நனைந்தான்.

சட்டென்று அருவிக்கு நெற்றி காட்டி மூக்குத் தண்டில்

வழியவிட்டான்.

செருப்பை உதறிவிட்டுப் பாதம் நனைத்தான்.

ஒருகை நீரை உறிஞ்சிக் குடித்தான்;
மறுகை நீரை மார்புக்குள் ஊற்றிக் கொண்டான்.

அந்தச் சில்லிப்பின் சிலிர்ப்பைத் தன் அங்கமெல்லாம்

பரவவிட்டான்.

பிறகு, திறந்தவிழி திறந்தபடியே திரும்பத் திரும்ப

நீரடித்தான்.

அங்குமிங்கும் ஓடி ஆனந்தக் கூத்தாடி மீண்டும்

பேருந்துக்குள் வந்தமர்ந்தான்.

அவனையே மொய்த்த கண்கள் மீது அவன் கண்கள் மொய்த்தன.

அவர்கள் நினைத்துக் கொண்டார்கள்:
"பாவம்! மூளையைத் தொலைத்தவன்"
அவன் நினைத்துக் கொண்டான்:
"பாவம்! வாழ்க்கையைத் தொலைத்த வர்கள்"

●

"மலையூத்துக்கு இங்கேதான் இறங்க வேண்டும்'

அவன் மட்டுமே இறங்கினான்.
என்ன ஏகாந்தம்!
இது பூமியின் தொடர்ச்சிதானா?
இல்லை வேறொரு கிரகமா?
இந்த மௌனம்தானா நான் பாட நினைத்த சங்கீதத்தின்

முதல் ஸ்வரம்?

இந்தப் பிரதேசம்தானா என் தாய் கட்டிக் கொடுக்காத

தாவரத் தொட்டில்?

என் ஜீவனை இங்கே விட்டுவிட்டு என் தேகம் மட்டும் எப்படி

கால் நூற்றாண்டு காற்றுக் குடித்தது?

●

குழந்தை தானே எடுத்துக் கொண்ட கோணல் வகிடாய் ஒற்றையடிப்

பாதையொன்று உள்ளே ஓடியது.

தோல் பையைத் தோள் பையாய்
மாற்றிக் கொண்டு, காலணி கழற்றிக்
கையணியாக்கிக் கொண்டு நடந்தான்.

புத்தம் புது பூமியின் ஸ்பரிசம் பாதங்களின் வழியே

உயிருக்குப் பயணமாகியது.

நடந்தான்.

வண்ணத்துப்பூச்சிகளின் வாசக சாலைகளாய் வெளியின்
இருமருங்கும் சின்னச் சின்னச் செம்பூக்கள்.

ஒரு வண்ணத்துப் பூச்சி தேன் குடித்த
மயக்கத்தில் சமாதிநிலை அடைந்திருந்தது.

மூச்சை நிறுத்தி முன்னேறினான்.

தூங்கும் குழந்தைக்கு நகம் வெட்டும் தாயாய் அதன் உறக்கம்
கலையாமல் இறக்கை பிடித்தான்.

எத்தனை வர்ணமென்று எண்ணினான்;
பிறகு சில்லென்று பறக்கவிட்டுச் சிறகடித்தான்.

"எனக்கு மட்டும் சிறகிருந்தால் வண்ணத்துப் பூச்சியோடு ஒருநாள்

வாழ்ந்திருப்பேனே!"

●

ஏ ஆடுமேய்க்கும் பையா!
ஒரே ஒருநாள் உன்னோடு என்னை ஆடு மேய்க்க அனுமதிப்பாயா?
இல்லை. அந்தச் செம்மறி மந்தையோடு என்னைச்
சேர்த்துக் கொள்வாயா?
நானும் ஓர் ஆடுதான்.
தப்பி வந்த ஆடு அல்லது தப்பித்து வந்த ஆடு.

உன் புல்லாங்குழல் கொடு.
வாசித்துக் காட்டப் போகிறேன்
ராகத்தை அல்ல; அது சொல்லும் பாடத்தை.
உடம்பெங்கும் புண்களைச் சுமந்து கொண்டும்
புன்னாகவராளி பாடுகிறதே புல்லாங்குழல்!
அந்த மகத்தான பாடத்தை மனிதர்க்குச் சொல்லப் போகிறேன்.
உன் புல்லாங்குழல் கொடு.

●

கிழங்கெடுக்கப் போன பெண்கள் அவனைக்
கண்களால் அகழ்ந்தார்கள்.
கடந்து போனவர்கள் விசித்திரப் பார்வை வீசினார்கள்.
அவன் நடந்து வரும்போதே அவன் வருகை
ஊருக்குள் பதிவாகி விட்டது.
பள்ளத்தாக்கில் மலைகள் தொட்டில்கட்டிக் கொடுத்திருக்கும் கிராமம் அது.
நட்சத்திரங்களாய் ஒன்றையொன்று உரசிக் கொள்ளாத வீடுகள்.
இந்தியாவில்விவசாயமே சரிவுதான் என்பது மாதிரி
சரிவுகளில் விவசாயம்.
ஒற்றையடிப் பாதைகளில் —
வயிற்றுக்கு வெளியே கர்ப்பம் தரித்திருக்கும்
மட்டக் குதிரைகள்; வயிற்றின் இருபுறமும் பலாக்காய்ச் சுமைகள்.
அங்கங்கே திரவப் பனிக்காய்த் தெறித்துச் செல்லும்
சில்லோடைகள்.
காதலியின் தாவணி கன்னத்தில் படுவது மாதிரி
மென்மையாய் உரசிப் போகும் மேகங்கள்.
முத்தத்தின் ஈரம்போல் துடைக்க விரும்பாத தூறல்
விண்ணில் ஏவ மண்ணே தயாரித்திருக்கும் ஏவுகணைகளாய்
வான்தடவி நிற்கும் நெடுமரங்கள்
மூச்சு வளர்க்கும் மூலிகைப் பள்ளம்.



"டி. வி. நாடகத்தைப் பற்றி ஒரு நேயர் எழுதியிருக்கார். 'அவர்கிட்ட ரோல் கேப் துப்பாக்கிதான் இருக்காம்... இல்லைன்னா நடக்கிறதே வேறயாம்...!'"
— ஆர். என். கண்ணன்.

ஓ! மலையூத்து மனிதர்களே!
நீங்கள் கொடுத்து வைத்தவர்கள்
நீங்கள் வசிப்பது இயற்கையின் இமைகளுக்குள் அல்லவா?
எந்த வாழ்க்கை தேடி நான் இத்தனை தூரம் ஓடிவந்தேனோ
அந்த வாழ்க்கையைத்தானே நீங்கள்
அன்றாடம் வாழ்கிறீர்கள்?

இதோ!
உங்கள் கூட்டுக்கு இன்னொரு பறவை
இதோ!
உங்கள் பந்தியில் இன்னோர் இலை.

●

பூட்டிக் கிடந்த மூங்கில் வீட்டின் ஒட்டடை களைந்தான்.
குளிரக் குளிர ஓடையில் குளித்தான்.
மூங்கில் வீட்டின் முகப்பில் ஒரு நாற்காலியிட்டுப்
பள்ளத்தாக்கில் பார்வை பரப்பினான்.
போதும்!
இது போதும்!
இந்த வானம்—இந்த பூமி — இந்தக் காற்று— இந்த ஊற்று
முகம் காட்டும் மரங்கள் — முகம் காட்டாத பறவைகள்
இவை போதும்.
என் பாடல்களை நிரப்ப இந்தப் பள்ளத்தாக்கு போதும்.
என் சொப்பனம் சுமக்க இந்தச் சுமைதாங்கி போதும்
நான் சிநேகம் பேச அந்தச் சிற்றோடை போதும்
மனசு ரசித்தது; அப்போது
வயிறு பசித்தது.

(இன்னும் செல்வேன்)

* எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

? ரஜினி அரசியலில் குதித்தால் முதல்வர் பதவியைப் பெற முடியுமா?

! தமிழக மக்கள் அப்படி ஓர் அசட்டுத்தனத்தைச் செய்ய, புத்திசாலியான ரஜினி அனுமதிக்க மாட்டார் என்று நம்புகிறேன்.

* எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.

? தனிமனிதர் துதி பாடுவதில் எந்த மாநிலம் முதலிடம் வகிக்கிறது?

! தமிழகமேதான். தனி மனிதர் துதி பாடுவது பற்றி ஆய்வு செய்து இங்கே ஒரு டாக்டர் பட்டமே வாங்கலாம்! கௌரவ டாக்டர் பட்டத்துக்கு அதுவும் தேவையில்லை!

* பி. நடராஜன், அன்னூர்.

? கிழக்கு ஜெர்மனி மேற்கு ஜெர்மனி இணைந்தது போல் இந்தியாவும் பாகிஸ்தானும் இணையுமா?

! நீர் ஒண்ணு. இருப்பதைத் தக்க வைத்துக் கொள்வதே இங்கே பெரும்பாடாக இருக்கும் போது... போகிற போக்கில் ஒரு தலைவர் கூறியதைப் போய்ப் பெரிது படுத்திக் கொண்டிருக்கிறீரே!

* ப. முனுசாமி, பெங்களூர்.

? ரேகாவின் கணவர் தற்கொலை எதைக் காட்டுகிறது?

! மின்னுவதெல்லாம் பொன்னல்ல என்பதைத்தான். திரை உலகின் ஜாஜ்வல்யம் கண்ணைப் பறிக்கும் ஒன்று. ஆனால் அதைக் கடந்து உள்ளே புகுந்து பார்த்தால் ஒரே சோக மயமான இருள். அங்கே பாரீஸ் செண்டின் மணம் கமழாது; ஒரே துர்நாற்றம்தான்!

* எஸ். எஸ். பூங்கதிர், திருவெண்ணெய் நல்லூர்.

? கணவனிடம் அடிபடுகிற மனைவிகள் அதிகமா? மனைவியிடம் அடிபடுகிற கணவர்கள் அதிகமா?

! எதுவானாலும் அதிகமாகக் காயம் அடைவது அவர்கள் அல்ல, இளம் தளிர்களே.

* கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

? கும்பகோணம் சங்கர மடத்தையும் அங்கிருந்தவர்களையும் திராவிடர் கழகத்தினர் தாக்கினார்களாமே?

! தட்டிக் கேட்க வேண்டியவர்கள் தலையைத் திருப்பிக் கொண்டால் துஷ்டர்களுக்குத் துணிவு வரத்தான் செய்யும்.

* என். முருகேஷ், பெருஞ்சேரி.

? தளபதி பட ஆரம்ப விழாவில் ரஜினி தம்மை 'நாற்பது வயதுக் குழந்தை' என்று கூறிக் கொண்டிருக்கிறாரே?

! நாற்பது வயதுக் குழந்தையாக இருந்தால்

## கவர்னர் பதவி தேவையற்றது என்கிறாரே கருணாநிதி?



• நஷ்டமுமில்லை...

• ...லாபமுமில்லை



இருந்துவிட்டுப் போகட்டும்; குழந்தைத் தனமாக நடிக்காமல் இருந்தால் சரி!

*** ஜி. கதிரேசன், சிறுமுகை.**

**? மு. க. முத்து தி. மு. க. விலிருந்து விலகி ஜெயலலிதா தலைமையை ஏற்று அ. தி. மு. க. வில் சேர்ந்து விட்டாரே?**

! எம். ஜி. ஆரை ஒடுக்க நினைத்துத்தான் மு. க. முத்துவைத் திரை உலகுக்குத் தயாரித்தார் கருணாநிதி. அன்றே அது நடக்கவில்லை. இன்று என்னடாவென்றால் எம். ஜி. ஆர். தொடங்கிய கட்சியிலேயே சேர்ந்து விட்டார் மு. க. முத்து! இந்த ஒரு வேடிக்கை விநோதம் தவிர, கருணாநிதிக்கு இதனால் நஷ்டமுமில்லை; ஜெயலலிதாவுக்கு லாபமும் இல்லை!

*** சி. ஜீவா, திருத்துறைப்பூண்டி.**

**? ஒரு கட்சி ஆட்சிக்கு வந்தவுடன் அதனை எதற்கெடுத்தாலும் புகழ்ந்து கொண்டே இருக்கும் சில பத்திரிகைகள் பற்றி...?**

! புகழ்ந்தால் 'ஜால்ரா' என்று முத்திரை குத்துகிறார்கள்; துணிந்து விமர்சித்தால் தாங்கிக் கொள்ள முடியாமல், பத்திரிகைக் கட்டுக்களையும் பத்திரிகைக் காரியாலய வாகனங்களையும் எரிக்கிறார்கள். பத்திரிகைச் சுதந்திரம் இந்தக் கதியை அடைந்திருக்கிறது இங்கே!

*** என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.**

**? கருணாநிதி சொல்வது போல கவர்னர் பதவி தேவையற்றதுதானா?**

! அவசியம் தேவையானது என்பதைப் பல முறை சரித்திரம் நிரூபித்துள்ளது. மீண்டும் நிரூபிக்கும். பல முதல்வர்கள் பல சந்தர்ப்பங்களில் தவறுகள் செய்வது போலச் சில ஆளுனர்களும் சில சமயங்களில் தவறு செய்கிறார்கள். அதற்காக அந்தப் பதவியே வேண்டாம் என்பது ஆபத்தானது. செருப்பு சில சமயம் காலைக் கடிக்கிறது என்பதால் செருப்பே உபயோகமில்லை, வேண்டாம் என்பார்களா?

*** ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.**

**? தமிழர்கள் பெருமைப்படும்படியான ஒரு விஷயம் கூறுங்கள்...?**

! ஏன், தமிழக முதல்வர் ரேஷன் கடைகள் இரண்டுக்கு விஜயம் செய்திருக்கிறாரே!

* அரசியலில் குதித்தால்...





* வளைகுடா சர்சார்ஜ்!

ரேஷன் கடை கியூவில் நிற்கும் நாம் ஒவ்வொருவரும் பெருமைப்பட வேண்டியதுதானே?

*** ஆர். நெடுஞ்செழியன், சென்னை.**

**? பெட்ரோலியப் பொருள்களுக்கு வளைகுடா சார்ஜ் விதிக்கப்பட்டுள்ளது பற்றி...?**

! அதைக் கூடப் புரிந்து கொள்ளலாம். ஆனால் அது தாற்காலிக சர்சார்ஜ்தான் என்று கூறுவதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை! எதற்கு இந்த ஏமாற்று வேலை?

*** எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம். ***

**? இட ஒதுக்கீட்டை எதிர்ப்பவர்கள், ஆதரிப்பவர்கள் இருவரில் யார் அதிக புத்திசாலிகள்?**

! எதிர்ப்பதாகக் கூறி தீக்குளிக்கும் புத்திசாலிகளை விட, ஆதரிப்பதாகக் கூறிப் பூணூல் அறுக்கும் மேதாவிகளை விட, அரசாங்கச் சார்பில் பந்த் நடத்துகிறவர்கள் தான் அதிமேதாவிகள்! அதுவும் இட ஒதுக்கீடுக்கு எதிர்ப்பே இல்லாத மாநிலத்தில் இட ஒதுக்கீடு ஆதரவாக அரசே பந்த் நடத்துவது எப்பேர்ப்பட்ட புத்திசாலித்தனம்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

எஸ். கே. மூர்த்தி,
49, ராமசாமி சன்னதி,
கும்பகோணம்.



படம் — 1

27

ஆரோக்கிய ரகசியம்:
வி. என். குமாரசாமி.

# சிரசாசனம்

ஒன்றரை அடி அகலம், இரண்டடி நீளத்தில் ஒரு துணி மடிப்பைத் தயார் செய்து கொள்ளவும். பருத்தியினாலான துப்பட்டியை மடித்துத் தயாரித்துக் கொள்ளலாம். ஒன்று அல்லது ஒன்றரை அங்குல கனமுள்ளதாக இந்தத் துணி மடிப்பு இருக்கலாம். ஆரம்ப சாதகர்கள் சிரசாசனத்தைச் சுவர் ஓரமாகத்தான் செய்ய வேண்டும்.

மடிப்பைச் சுவருக்கு ஒட்டினாற் போல் வைத்துக் கொள்ளவும். மடிப்புக்கு அரை அடி தூரத்தில், முழங்கால்களை மடித்து, மண்டியிட்டாற் போல் அமரவும். கைகள் தொடை மீதும் பிருஷ்டம் குதிகால்களின் மீதும் இலேசாகப் பதிந்திருக்க வேண்டும். பிறகு இரண்டு கை விரல்களையும் ஒன்றாகக் கோத்துக் கொண்டு, முழங்கை வரை மடிப்பில் இருக்குமாறு கைகளை ஊன்றவும். இப்போது உடம்பு கிட்டத்தட்ட குழந்தை தவழும் நிலையில் இருக்கும். பின்னர் உச்சந்தலை மடிப்பில் பதிகிற மாதிரி இரண்டு கைகளுக்கு இடையில் — கோத்துக் கொண்ட விரல்களால் பின் தலை அணைக்கப்படுவது போல் — வைக்கவும். (படம்— 1) பிறகு முழங்கால்களைத் தரையை விட்டுத் தூக்கிப் பாதங்களின் விரல்கள் மட்டும் தரையில் இருக்கச் செய்யவும். (படம்— 2). கூடுமான வரை உடலை உயர்த்தி, கால்களைச் சிரசின் சமீபம் மடிக்காமலேயே எவ்வளவு முடியுமோ கொண்டு வரவும். சற்றே மூச்சைப் பிடித்துக் கால்களை இலேசாக உதைத்துக் கொண்டு மேலே உயர்த்தி, படம் — 3 இல் உள்ள நிலைக்கு வரவும். பிறகு முழங்கால்களை மெதுவாக உயர்த்திக் கால்களை நேராகத் தூக்கி, இரு பாதங்களையும் நேராக நீட்டிப் படம் — 4 இல் உள்ள நிலைக்கு வரவும். இந்நிலையில் வேண்டிய நேரம் இருந்து, கால்களை மடக்கி, படம் — 3 இல் உள்ள நிலைக்கு வந்து, பிறகு கால்களை மெல்ல இறக்கி படம் — 2 இல் உள்ள நிலைக்கு வரவும். பிறகு விரிப்பில் உடலை நன்றாக நீட்டி,



படம் — 2

மல்லாந்து படுத்து, உடலைத் தளர விட்டுக் கண்களை மூடி ஓரிரு நிமிடம் இளைப்பாறவும். இரண்டாம் படம் நிலையிலிருந்து சற்றே மூச்சைப் பிடித்து மூன்றாம் படத்தின் நிலைக்கு வந்த பிறகு, மூச்சைச் சாதாரணமாக இழுத்து விடலாம். படபடப்பே கூடாது.

ஆரம்பத்தில் சுவர் ஓரமாக இருந்து பழகிக் கொண்டு பிறகு சிறிது சிறிதாகச் சுவரின் உதவியின்றிச் செய்ய முயற்சி எடுக்க வேண்டும். ஒரு சிலரைத் தவிர மற்றவர்களெல்லாம் சிரசாசனம் செய்ய உடலைத் தூக்கிச் சுவரில் சாற்றும் போது உடல் முழுவதும் சுவரில் சாய்ந்தே இருக்கும். சில நாட்கள் சென்று குதிகால் மட்டும் சுவரில் வைத்து, உடலின் மற்ற பாகங்கள் சுவரை விட்டு விலகித் தனியாய், நேராய் இருக்க முயற்சி செய்ய வேண்டும். இன்னும் சில நாட்கள் பொறுத்து, ஒரு காலை மட்டும் மெதுவாகச் சுவரை விட்டுக் கிளப்பி முன்னுக்குக் கொண்டு வர வேண்டும். பிறகு அந்தக் குதிகாலைச் சுவரில் மீண்டும் பதிய வைத்து, மற்றொரு காலைச் சுவரை விட்டுக் கிளப்பி முன்னுக்குக் கொண்டுவர வேண்டும். இப்படி நிதானமாக இரு கால்களையும் மாறி மாறிச் சுவரை விட்டு நீக்கி நிற்கப் பழகலாம். இன்னும் சில நாட்கள் சென்று, முதலில் ஒரு காலையும் பிறகு இலேசாக இன்னொரு காலையும் சுவரை விட்டு நீக்கி முன்னுக்குக் கொணர்ந்து பார்க்கலாம். இவ்வாறு சுவரின் பிடிப்பு அதிகமில்லாமல் இரு கால்களையும் வைக்க முடிகிறதா என்று பார்க்க

வேண்டும். ஒரு வினாடி கால்களைச் சற்று விலக்கிப் பார்த்து, மறுபடி சுவரில் வைத்து விடவேண்டும். மறுபடி கால்களை ஒரு வினாடி விலக்கிப் பார்ப்பது, விழுந்து விடுவோம் போலிருந்தால், மீண்டும் சுவரின் துணையை நாடுவது என்று இவ்வாறு சிறிது சிறிதாக முயற்சி செய்து கொண்டே இருந்தால், சில நாட்களில் அல்லது வாரங்களில் சுவரின் உதவி இல்லாமலேயே தனியாய் நிற்க வரும். அப்புறம் சுவர் ஓரத்தை ஒதுக்கி அறையின் மையத்திலேயே செய்யத் தைரியம் வரும்!

ஆரம்ப சாதகர்கள் சிரசாசனத்தில் அதிக நேரம் நிற்கக் கூடாது. கால் நிமிஷம் இருந்தாலே போதும். பிறகு இறங்கி விட வேண்டும். நாலைந்து நாட்களுக்குப் பிறகு



படம் — 3

அரை நிமிஷமாக அதிகரிக்கலாம். இரண்டு மூன்று வாரங்களுக்குப் பிறகு முக்கால் நிமிஷம், மேலும் சில வாரங்கள் சென்று ஒரு நிமிஷம் என்று சிறிது சிறிதாகவே நேரத்தை உயர்த்த வேண்டும். சுவரை ஒட்டி ஒரு நிமிஷம் அல்லது ஒன்றரை நிமிஷம் நிற்கப் பழகிய பிறகு, கால்களை மாறி மாறிச் சுவரை விட்டு நீக்கும் பயிற்சியை மேற்கொள்ளலாம். இதில் படிப்படியாக அவசரப்படாமல் முன்னேறி, தனியே சுவர் உதவியின்றி நிற்பதில் வெற்றி கண்ட பிறகு, நேரத்தை மேலும் அதிகரிக்கலாம். ஒன்றரை நிமிஷம் என்பதை இரண்டு நிமிஷம், இரண்டரை நிமிஷம் என்று அதிகரித்து, நாளாவட்டத்தில் ஐந்து நிமிஷம் முதல் பத்து நிமிஷம் வரை சிரசாசன நிலையில் நிற்கலாம். யோக சாதகர்கள் அரைமணி நேரம் கூட நிற்பார்கள். நமக்குத் தேவையில்லை. ஐந்து நிமிஷத்தை அடையவே பல மாதங்கள் ஆகும். அப்படிப் பல நாட்களுக்கு ஒரு முறை சிறிது சிறிதாகத்தான் நேரத்தை அதிகரிக்க வேண்டும். எக்காரணம் கொண்டும் அவசரப்படவே கூடாது.

சிரசாசனம் செய்ய யாரும் பயப்பட வேண்டியதில்லை. ஆனால் மேலே விவரித்தது போல் நிதானம் தேவை. மேலும் சில முன்னெச்சரிக்கைகளும் உண்டு. அவற்றை விவரமாக அடுத்த வாரம் சொல்கிறேன். அதையும் படித்த பிறகு ஆசனம் பழக ஆரம்பிக்கலாம்.

(தொடரும்)

படங்கள்: **உத்ரா.**

நன்றி:

**சிவானந்த யோக வேதாந்த கேந்திரம், சென்னை.**



படம்— 4

# கமிஷன் வீரரே, வருக!

சாப்பாட்டு மெஸ்ஸில் ஒரே கூட்டம். அங்கிருந்த ஒரே சர்வரிடம் பலரும், 'இது வேணும்' 'அது வேணும்' என்று கேட்க, எரிச்சலுற்ற சர்வர், 'ஆண்டவன் எனக்கென்ன நாலு கையா கொடுத்திருக்கான்?' என்றார்.

சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் 'நாலு கை இருந்தால் நீயே ஆண்டவனாகியிருப்பியே!' என்று பதில் கூற புரையேறும் அளவுக்கு மெஸ்ஸில் சிரிப்பு அலை!

— 'தம்மா', சென்னை — 5.

* * *



''சாட்சி சொல்லக் கூண்டில் வந்து நிற்கும் உன் பெயர் என்னம்மா?''

'''கிளி'யம்மா.''

— எம். கண்ணன், பெங்களூர்.

* * *

● ''கமிஷன் வீரர் கலைஞர் அவர்களே வருக வருக'' என்று ஒரு வரவேற்பு வாசகம் பார்த்து எதிர்க்கட்சி எம். எல். ஏ. யாரும் கலைஞரைக் கிண்




டல் செய்து வரவேற்கின்றனரோ என்று பார்த்தால் கீழே தி. மு. க. எம். எல். ஏ. பெயர்!

அப்புறம்தான் தெரிந்தது, ''மண்டல்'' என்பதின் மேல் வேறு போஸ்டர்கள் ஒட்டி விட்டனர் என்று. அதை மறைத்து விட்டதால் அர்த்தமே மாறிவிட்டது!

பாளையங்கோட்டையில் தேரில் பார்த்தவர்: எம். கே. முகமது அலி, ஈரோடு.

* * *

● நகரப் பேருந்து ஒரு நிறுத்தத்தில் நின்று பயணிகள் இறங்கியவுடன் புறப்படத் தயாரானது. அப்போது சற்றுத் தொலைவிலிருந்து ஒரு வயதான மூதாட்டி, தம் வயதையும் பொருட்படுத்தாமல், பேருந்தில் ஏற வேகமாக ஓடி வந்தார். அதைப் பார்த்த, பேருந்தில் இருந்த இரு இளைஞர்கள் பேசிக் கொண்டார்கள்: ''அடேயப்பா, என்ன வேகம்! பி. டி. உஷாவோ?''

''இல்லப்பா. 'பாட்டி' உஷா!''

— பி. கிருஷ்ணமூர்த்தி, மேலப்பாளையம்.

* * *

கணவன்: என்னடி அநியாயம் இது? பெண் மகாலட்சுமி மாதிரி இருக்கா; சமைக்கத் தெரியும்; பாடத் தெரியும்; நம்ம பையனுக்கும் பிடிச்சுப் போச்சு; நீ கேட்டதுக்கு மேலேயே சீர் செய்ய

சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!



றோம்னும் சொல்றாங்க; அப்பவும் நீ வேண்டாங் கறயே?

மனைவி: அந்தப் பொண்ணு கராத்தேவில், "கருப்பு பெல்ட்" வாங்கியிருக்காளாமே!

— ப. தட்சிணாமூர்த்தி, குரும்பலமகாதேவி.

• • •



"வீட்டு வேலை செய்ய நிறையப் பேரை இண்டர்வியூ செய்தியே... என்னாச்சு?"

"என் கணவர்தான் ஜெயிச்சார்!"

— அ. அப்துல் பரீது, திருப்பத்தூர்.

• • •

● எங்கள் பாங்கில் டெபாசிட் கேன்வாஸ் செய்வதற்காக ஒரு கிராமத்திற்குச் சென்று, அவர்களிடம், 'நீங்கள் ஒரு தொகையை இப்பொழுது எங்கள் பாங்கில் டெபாஸிட் செய்தால் இருபது வருடங்கள் கழித்து உங்கள் பெண் கல்யாணத்திற்கோ பையனின் படிப்பிற்கோ, கணிசமான தொகை கிடைக்கும்' என்று சொன்னோம். கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவர், 'என்னிடம் அவ்வளவு பணம் இல்லை; வேண்டுமானால் நீங்கள் இருபது வருடங்கள் கழித்துக் கொடுக்கப் போகும் தொகையில் அதைக்கழித்துக்கொண்டு கொடுங்களேன்' என்றாரே பார்க்கலாம்!

— உப்பிலி, சென்னை — 73.

• • •

● ஒரு நாள் மாலை நேரம். அண்ணா நகரிலிருந்து பஸ்ஸில் வரும் போது, காலேஜ் முடியும் நேரமாதலால், பெண்கள் பக்கம் கல்லூரிப் பெண்களும், ஆண்கள் பக்கம் ஆபீஸ் செல்லும் நடுத்தர வயதினரும் நின்றிருந்தனர். கண்டக்டர், "நடுவில் என்ன ஓழு?" என்று கேட்க, பஸ்ஸில் ஒருவர், "ஜெனரேஷன் கேப்" என்று சொல்லவும், பஸ்ஸில் ஒரே கலகல.

— பானு சுரேஷ், ஆதம்பாக்கம்.




● பல்லவன் பஸ்ஸில் காலை நேரம். நடத்துனர் இருக்கையின் முன் உள்ள பெண்கள் இடத்தில் படு கவர்ச்சியாக ட்ரெஸ் செய்து கொண்டு ஒரு பெண்மணி. பஸ்ஸில் ஏறும் வாலிப, வயோதிகர்கள் பாரபட்சம் இல்லாமல் அந்த இருக்கையின் அருகிலேயே நின்றனர். உள்ளே நிறைய இடம் காலியாக இருந்தும் ஒருவரும் அந்த இடத்தை விட்டு நகரவில்லை. விஷயத்தை அறிந்தும் நடத்துனர், "பார்த்தவர்கள் முன்னால் செல்லுங்கள்" என்றாரே பார்க்கலாம், ஒரே அசடு வழிசல்தான்!

— வசுதா கிருஷ்ணஸ்வாமி, சென்னை — 35.



"'வியாபாரம் நல்லாச் சூடு பிடிச்சதால ஏகப்பட்ட நஷ்டம்'னு சொல்றீங்களே, அது எப்படி?"

"பட்டாசு வியாபாரமாச்சே, அதான்!"

— வீ. ஐயப்பன்,
திருவெண்ணெய்நல்லூர்.

# கொசு விரட்டிகளால் கெடுதல் இல்லையா?

● டி. நரசிம்மராஜ், மதுரை — 1.

**மூளைக் காய்ச்சல் என்னும் கொடிய நோய், குழந்தைகளை மட்டுமே தாக்குமா? அல்லது எல்லா வயதினரையும் தாக்குமா? மருந்து இதுவரை கண்டுபிடிக்கப்பட வில்லை என்பது உண்மையா? அப்படி மருத்துவம் பார்த்தாலும், அந்நோயால் பாதிக்கப்பட்டவர்கள் மூளை வளர்ச்சி குன்றி, புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள் போல் வாழ வேண்டி வரும் எனப் பெரும் பாலோர் கூறுவது உண்மையா?**

டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம், சென்னை — 18.

மூளைக்காய்ச்சல்குழந்தைகளை மட்டுமே தாக்கும் என்பதில்லை. மூளைக் காய்ச்சல் இரண்டு வகைப்படும். ஒன்று Chronic; மெதுவாக, கொஞ்சம் கொஞ்சமாகப் பாதிக்கும். இது காசநோய்க் கிருமிகளால் உண்டாகக் கூடியது. இதற்குச் சிகிச்சை அளித்துக் குணமாக்க முடியும். இரண்டாவது வகை, Acute — தீவிரமானது. ஆரம்பமாகும் போதே கண்டுபிடிக்கப்பட வேண்டும். அப்படிக் கண்டுபிடிக்கப்படும் பட்சத்தில், திறமையான வைத்திய முறையால் குணப்படுத்த முடியும். சிகிச்சைக்கான மருந்துகள் தாராளமாகக் கிடைக்கின்றன. புத்தி சுவாதீனம் இல்லாதவர் போல் வாழ வேண்டி வரும் என்பது உண்மையல்ல.

● அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

**வத்தி எரிந்து புகை, மின்சக்தியால் வில்லையிலிருந்து வெளியாகும் ரசாயனப் புகை எனப் பலவகை கொசுவிரட்டி சாதனங்களை நாளுக்கு நாள் அதிக மக்கள் பயன்படுத்துகின்றனர். இதனால் மனிதர்களுக்குத் தீங்கில்லை என அக்கம்பெனிகள் கூறுகின்றன. மூடிய அறையில் பச்சிளங் குழந்தைகளும் அன்றாடம் எட்டு மணி நேரம் சுவாசிக்கின்றன. கெடுதல் எனப் பின்னர் ஏற்பட்டால், லட்சக்கணக்கானவர்களின் சுவாச உறுப்புக்கள் கடுமையாகப் பாதிக்கப்படக் கூடும். தரக் கட்டுப்பாட்டு முத்திரையும் அளிக்கப்படுவதாகத் தெரியவில்லை. இதுபற்றி மருத்துவ ரீதியாக ஆராயப்பட்டுள்ளதா?**

கொசுவிற்கு விஷம் என்று சொல்லும் போது, மனிதனுக்கும் மிகச் சிறிய அளவிலேனும் அந்த விஷம் பாதிக்கும். அடைத்த அறையில் வெகு நேரம் சுவாசித்தால் நிச்சயம் கெடுதல் இருக்கலாம். ஆனால் இது பற்றி, தீவிரமாகப் பரிசோதித்து யாரும் அபிப்ராயம் தெரிவிக்கவில்லை. ஆஸ்த்துமா உள்ளவர்களுக்கு இது கெடுதல்தான்.

● எ. சிவகுமார், சென்னை — 16:

**கண்களில் ஏற்படும் Eales Disease (கண் நரம்புகளில் ரத்தக் கசிவு) எதனால், எவ்வாறு ஏற்படுகிறது? இதைக் கவனிக்காவிட்டால் விளைவுகள் என்ன? சிகிச்சை முறை எப்படி?**

டாக்டர் ஆர். ஜே. ஞானாதிக்கம், கண் மருத்துவர், சென்னை — 18.

'ஈல்ஸ்' என்ற இந்த வகை நோய், வெகு அபூர்வமாகவே காணப்படும். இதற்கு முக்கியமான காரணம், கண்களைக் காச நோய் தாக்குவதுதான். விழித்திரையில் உள்ள சிரைகள் (Retinal Veins) பாதிக்கப்பட்டு, அவற்றிலிருந்து ரத்தம் கசிய ஆரம்பிக்கும். ஆனால் இந்த ரத்தம் விழியை விட்டு வெளியே கொட்டாது. அவ்வப்போது ரத்தம் கசியக் கசிய, அது அங்கேயே உறிஞ்சப்பட்டு விடும். அதாவது Absorb ஆகி விடும். பிறகு மெல்ல மெல்லப் பார்வை குறைந்து கொண்டே வந்து, கடைசியில் முழுதுமாகப் பார்வை போய் விடும். பெரும்பாலும் இளையவர்களுக்குத்தான் இந்நோய் வரும். காசநோய்க்குக் கொடுக்கப்படும் மருந்துகளே இதற்கும் கொடுக்கப்பட்டு, இந்நோய் குணமாகிறது. காச நோய்ச் சிகிச்சை பெறுபவர் போலவே நல்ல சத்து மிக்க உணவு உண்ண வேண்டும்.




● **கலா, சென்னை — 95:**

**கடந்த ஆண்டு ஸ்கூட்டரில் ஏற்பட்ட ஒரு சின்ன விபத்தால் என் கணவரின் முன் பக்கத் தலையில் அடிபட்டு நினைவிழந்தார். சிகிச்சையளித்த பிறகு, பழைய விஷயங்கள் படிப்படியாக நினைவுக்கு வந்தன. எனினும் இரு ஆண்டுகளுக்கு முன்பு அவருடைய தந்தை இறந்ததும், விபத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்பு நடந்த அவர் சகோதரர் மகள் திருமணமும், அவர் நினைவுக்கு இதுவரை வரவேயில்லை. நண்பர்களையும், உறவினர்களையும் அடையாளம் காண்பதில் ஒரு புறம் சிரமம்; மறுபுறம் அவருடைய தைரியம் எங்கேயோ போய் விட்டது. சிறு குழந்தையைப் போல் பயப்படுகிறார். குழந்தைகளிடம் அன்பாகவும், பொறுமையாகவும் இருக்கும் அவர், இப்போது சிறு சிறு விஷயங்களுக்குக் கூடப் பொறுமை இழந்து கத்துகிறார். மிகவும் உணர்ச்சிவசப்படுகிறார். அவருக்கு என்னதான் நேர்ந்திருக்கிறது? பழையபடி நூறு சதம் குணமடைவாரா?**

**டாக்டர் எஸ். தர்மராஜன், நரம்பியல் சிகிச்சை நிபுணர், சென்னை — 4:**

மூளையில் காயம் ஏற்பட்ட பின்னர், நினைவுகள் பாதிக்கப்படுவதற்கு அம்னீசியா (**amnesia**) என்று பெயர். விபத்துக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகள் மறந்து விடுவதற்கு ரெட்ரோகிரேட் அம்னீசியா (**Retrograde Amnesia**) என்றும், விபத்துக்குப் பிறகு நடந்த நிகழ்ச்சிகள் மறந்து விடுவதற்கு **Post-Traumatic Amnesia** என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. மூளையின் காயம் எத்தனைக்கு எத்தனை அதிகமாக இருக்கிறதோ, அத்தனைக்கத்தனை **Post Traumatic Amnesia**வின் கால அளவும் அதிகமாக இருக்கும். மிகப் பழைய நிகழ்ச்சிகள் — உதாரணமாகச் சிறு வயதில் நடந்த நிகழ்ச்சிகள் மூளையில் மிகத் தெளிவாகப் பதிவாகியிருக்கும். அவை நீங்குவது கடினம். ஆனால் சமீப கால நிகழ்ச்சிகள், மூளையில் அவ்வளவு தெளிவாகப் பதிவு பெறாமல் இருப்பதால், அவை விபத்துக்களின் போது பாதிப்படைகின்றன. உங்கள் கணவருக்கு, இரண்டு வருடங்களுக்கு முன் அவருடைய தந்தை இறந்ததும், ஒரு வாரத்துக்கு முன் அவர் சகோதரர் மகள் திருமணம் நடந்ததும் நினைவுக்கு வராமல் இருப்பதற்கு இதுவே காரணம். அவை திரும்பவும் அவருடைய நினைவுக்கு வருமா என்பது சந்தேகம் தான்.

ஆனால், இப்போது அவருடைய நடத்தையில் உள்ள பயப்படும் குணம், பொறுமை இழந்திருத்தல், மிகவும் உணர்ச்சி வசப்படுதல் ஆகியவை அவற்றுக்குரிய மருந்துகள் கொடுத்து வந்தால் குணமடைவதற்கு வாய்ப்பு இருக்கிறது.

● **எச். சசிகலா, திருச்சி — 1**

**நாக்கின் மேற்பகுதியில் சிலருக்குக் கறுப்பு நிறப் புள்ளிகள் காணப்படுகின்றன? இவை எப்படி உண்டாகின்றன? விளைவுகள் என்ன? இப்புள்ளிகளை அகற்ற முடியுமா?**

**டாக்டர் வி. கிருஷ்ணமூர்த்தி (சென்னை காளியப்பா மருத்துவமனை, சென்னை — 28):**

முதலாவதாக, நாக்கின் மேற்பகுதியிலுள்ள திசுக்களில், இயற்கையாக ஏற்படும் கிரட்டின் (**Keratin**) எனப்படும் புரதம் அவ்வப்போது உதிராமல் இருப்பதால் நாக்கு கருமையாகிறது. இது நாளாவட்டத்தில் சரியாகி விடும். ஊறு ஒன்றும் இல்லை.

மற்ற உறுப்புக்களில் உள்ள நோய்களினாலும், நாக்கில் கரும்புள்ளிகள் தோன்றலாம். உதாரணமாக — அடிசன் நோய் (உடலில் கார்டிசால் உற்பத்தி குறைவாக இருப்பதால் வருவது); மற்றும் புற்றுநோயின் அறிகுறியாகவும் தோன்றலாம். இவற்றுக்கு மருத்துவரின் பரிசோதனை அவசியம்.

நாம் அன்றாடம் எடுத்துக் கொள்ளும் மருந்துகளினாலும் கரும்புள்ளிகள் தோன்றக்கூடும். தூக்க மாத்திரைகள், மலேரியா மாத்திரைகள், கர்ப்பத்தடை மாத்திரைகள் போன்றவை சில உதாரணங்கள்.

குழந்தைகளுக்கு, கொக்கிப் புழு இருப்பதால் இம் மாதிரி கரும்புள்ளிகள் வரலாம் என்ற கருத்தும் மருத்துவரிடையே நிலவுகிறது.

தொகுப்பு: **எஸ். வி. என்.**



# சத்ரியன்

இயக்குனர் மணிரத்னம் தன் பாணி டைரக்‌ஷனுக்கு ஒரு வாரிசை உருவாக்கிப் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்துவிட்டுத் தயாரிப்பாளராக மாறிப் பின்னணியில் நிற்க, இயக்குனர் கே. சுபாஷ் உதயம்.

கதை, திரைக்கதை இரண்டுமே மணிரத்னம்தான். சிக்கனமான சின்னக் கரு. நல்லவனுக்கும் கெட்டவனுக்கும் இடையே நடைபெறும் போராட்டம். நல்லவன் கடமை உணர்வோடு செயல்பட்டு, போராடி வெற்றி பெற்றுத் தலை நிமிர, கெட்டவன் முடிவில் அழிந்துபோக, இடையிடையே மணிரத்னம் பாணி முத்திரைகள் பளிச். கொஞ்சம் யதார்த்தம், கொஞ்சம் மிகை, கொஞ்சம் மசாலா என்று தென்படும் அளவான கலவை.

வசனங்களில் கடமுடாவோ, மூச்சுத் திணறச் செய்யும் நெடுந்தொலைவு வாக்கியங்களோ இல்லாதது ஆறுதல். உணர்ச்சிகளை வெளிப்படுத்த இடைவெளியளித்து, தேவையான இடங்களில் தேவையானதை வெளிப்படுத்த மட்டுமே பயன் படுத்தப்பட்டிருப்பது 'பேஷ்' சொல்ல வைக்கிறது. இதே வகையில் இன்னுமொரு 'பேஷ்' பெறுவது கேமரா..

வித்தியாசமான விஜயகாந்த். சிறு வயது முதலே கொலையையும் ரத்தத்தையும் (சற்று அதிகமாகவே சிந்தியிருக்கிறார்கள்) கண்டு இறுகிப் போன பாத்திரம். சட்டத்துக்கெதிராக நடப்பவர்களிடம், சட்டத்தையும் மீறிக் கொடுமையாக நடந்து கொண்டு, அவர்களைத் தண்டிக்கும் இயல்பு நிறைந்து, ''வழியைப் பற்றிக் கவலைப்படாதீங்க... முடிவைப் பாருங்க'' என்கிற தத்துவத்தைக் கடைப் பிடிக்கும் முரட்டுப் போலீஸ் அதிகாரி.

பானுப்பிரியா, வாஷிங் மெஷின் விளம்பரத்தில் சொல்லப் படுவதைப் போலப் ''படு சுட்டி''. துல்லியமான, தூய்மையான கலவை நடிப்பு. வாகான உடலையும் வளமான கண்களையும் பயன்படுத்தி அமர்க்களம் செய்து விடுகிறார். அமெச்சூர்த்தனமும் கிராமியத்தனமும் கலவாத நடன அசைவுகள் ஒரு ப்ளஸ் பாயின்ட்.

எங்கேயிருந்து பிடித்திருக்கிறார்கள் அந்த இரண்டு குழந்தைகளையும்? பானுப்பிரியா தம்மை மணந்து கொள்ளச் சொல்லி அப்பா விஜயகாந்திடம் மன்றாடுவதைக் கேட்டு விட்டு முகம் சுண்டிப போவதும், பின்னர் பானுப்பிரியாவைத் தனியே அழைத்து, தாயற்ற தங்களை அப்பாவிடமிருந்து அவர் பிரித்து விடுவாரோ என்று சந்தேக விளக்கம் கேட்பதும், அப்படி நடைபெறாது என்பதை உறுதியாகத் தெரிந்து கொண்ட மகிழ்ச்சியுடன் திரும்பி வரும் போது எதிர்ப்படும் விஜயகாந்திடம், ''ஓகே... ஓகே...'' என்று கூறிவிட்டு குமுட்டுச் சிரிப்புடன் ஓடுவதும் திருஷ்டி சுற்றி போட வேண்டிய சமாசாரங்கள்.

யார் சார் அந்த 'அண்ணாச்சி' அருமை நாயகம்? வேட்டி, சட்டை வில்லனாக வந்து, கேரள உச்சரிப்புடன் தமிழ் பேசி, அலட்டிக் கொள்ளாமல் நடித்து வைத்து அசர வைத்து விடுகிறாரே!

இசை இளையராஜா என்று சொன்னாலே போதும்.

''க்ஷத்திரியனுக்குச் சாவு இல்லை'' என்கிற வசனத்தை வெவ்வேறு சந்தர்ப்பங்களில் புகுத்தித் தலைப்பை நியாயப்படுத்தியிருப்பது சரிதான். அதற்காக அதையே 'சத்ரியன்' என்று எழுதியிருக்க வேண்டுமா, என்ன?

**— சி. ஆர். கே.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: பி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

புதிய




இண்டர்நேஷனல்
டியோடரண்ட்
உள்ளது

சாதாரண சோப்புகள்,



உடல் வாடையைத் தடுக்காது

புதிய ஷீல்டின்



இண்டர்நேஷனல்
டியோடரண்ட் மட்டுமே
தீவிரமாக உடல் வாடையை
தடுக்கிறது. தன்னம்பிக்கை
புத்துணர்வு தருகிறது . . . மணிக்கு மணி

ஷீல்டு தருகிறது நம்பிக்கை.

## தோழர்கள் • தருவார்கள் • சிறப்புஇடம் - உங்களுக்கே !



இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS SH G 78 2416T